ட்டுப் பிசைந்து களிக்கின்டிபாவது ஆவினெய்யில் அடை சுட்டாவது 3-நாள் கொடுக்கத்தீரும்.

அபானரோகம் மேற்படி மூலக்கு.

காட்டுக் கரணைக்கிழங்கு கழஞ்சு 106-க்கு கழஞ்சு கொடுவேலி வேர் மிளகு வகைக்குக் கழஞ்சு-2 இவைகளைச் சூரணஞ்செய்து கழற் காய்ப்பிரமாணம் நல்லெண்ணெயிற் குழைத்து 27-நாள் கொள்ளத் தீரும் புளிதள்ளவும்.

உள்மூலம் பிறமூலத்திற்கும்.

மூக்குரட்டை பிலையை எலுமிச்சங்காய்ப் பிரமாண மறைத்துக் கருக்குருவைமாவில் பிசைந்து வடைதட்டி நெய்யில்வேகவைத்து 5-நாள் கொடுக்கத்தீரும்.

மூலக்கடுப்பும் இரத்தமூலத்திற்கும்.

அரைக்காற்படி ஓமத்தை 7-தடவை வருத்துத்தேய்த்து உமிபோக்கி அதினுடன் இரண்டுவிராகனிடை வசம்பைச் சுட்டசாம்பலையுங் கூட்டித் தேனில் மத்தித்து நாழியொன்றிற்கு ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் கொள்ளத்தீரும்.

உள்மூலம் பிறமூலம் விஷபாண்டு காமாலை வீக்கங்களுக்கும்.

வடக்கே ஓடியிருக்கிற சங்கவேர்ப்பட்டை ஒரு நாரத்தங்காய்ப்பிரமாணம் அரைத்து சோமநாதப் பெருங்காயம் விராகனிடை 2-பொடித்து ஒன்றுப்விட்டு ஒரு பிங்கானிவிட்டு மருந்து மறையும்படி எலுமிச்சம் பழச்சாறு கிண்டிவிட்டு வெளியில்வைக்கப் பொங்கிவரும் அதை எடுத்துநாளொன்றிற்கு முள்ளிக்காய்பிரமாணம் 6-நாள்கொள்ளதீரும்.

உள்மூலம் பிறமூலம் வெப்பம் யாவை முதலான வியாதிகட்கு சூரணம்.

காட்டுக்கரணை கறிக்கரணை பிரண்டை புளியமடல் இலைகளின் கிழங்கு வகைக்குப்பலம்-5 கொடிவேலிவேர் திரிகடுகு திப்பிலி திப்பிலி மூலம் இந்துப்பு வளையலுப்பு அட்டுப்பு பெருங்காயம் வெட்பாலையரிசி விளாவரிசி உள்ளி அதிவிடையம் சீரகம் கடுகு ரோகணி கருஞ்சீரகம் தேவதாரம் வகைக்குப்பலம்-1 இடித்து சூரணித்து மூன்றுவருடஞ்சென்ற கருங்கோழியைக் கால்தலை மயிர் குடல் சிறகு நீக்கி அதின் வயிற்றுக்குள் மேற்படிமருந்துகளை வைத்துத்தைத்து ஒருபானையில் மூன்றுபடி ஆவின்பாலும் 3-படி காடியும்விட்டு வாயில் சீலையை வேடுகட்டி அதின்மேல் கோழியைவைத்துமூடி வெந்தபின் எலும்பைநீக்கி யிடித்து உலர்த்தி சூரணித்துக்கொண்டு திரிகடிப்பிரமாணம் தேனிலாவதுசுக்கு கியாழத்திலாவது நெய்யிலாவது கொள்ளத்தீரும் புளி புகையிலை தள்ளவும்.

மூலபாண்டு மந்தாகினிக்கு.

ஓமம் சுக்கு கொடிவேலிவேர் வகைக்குப்பலம்-1 கடுக்காய் பலம்-3 இவைகளை யிடித்துக்கொண்டு திரிகடிப்பிரமாணம் மோரிற்கொள்ளத் தீரும்.

மூலவாயுக்குணம்.

மந்தியும் மந்திக்கும் உடல்வெளுக்கும் வயிறு சதாகாலமும் இரைந்துக்கொண்டிருக்கும்.

நிவர்த்தி.

வெள்ளுள்ளி பலம்-5 அரைத்து அரைப்படி ஆவின்பாலிற் கலக்கிக் காச்சிப் புரைகுற்றி உரையவைத்து தயிரெடுத்து அந்தத் தயிரை அந்திசந்தி இருபோது மூன்றுநாள் அன்னத்திற்விட்டுச் சாப்பிட மூலவாயு பொருமல தீரும்.

விரைநீக்கிய கடுக்காய்-20 ஒருதலைப்பூண்டு-20 பெருங்காயம் கழஞ்சு-2 முடக்கொத்தான் கொழுந்து ஒருபடி இவைகளை நன்றாய்பிசைந்து ஒருபடி விளக்கெண்ணெயிற்போட்டு பதமாய்க்காய்ச்சி வடித்து ஒருகரண்டிவீதம் 15-நாள்கொள்ள சகலவாயுவும் மலக்கட்டுந்தீரும்.

எருமைத்தயிரைத் துணியில்முடிந்து தொங்கவிட்டு தண்ணீர் வடிந்தபின்பு எடுத்து அதில் வெள்ளைப்பூண்டை யரைத்து ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் கலக்கிக்கொடுக்கத் தீரும்.

சிவதைவேர் பலம்-1 கரிபலை கொத்தமல்லி இந்துப்பு தேசாவரம் செவியம் முத்தக்காசு திரிகடுகு கருஞ்சீரகம் நற்சீரகம் சிறுநாகப்பூ அன்னபேதி விலாமிச்சி வகைக்கு கழஞ்சி-1 தேவதாரம் லவங்கப்பத்திரி சாதிப்பத்திரி சந்தனம் பொரிகாரம் கஸ்தூரிமஞ்சள் சடாமாஞ்சில் வாய்விளங்கம் வகைக்குக் கழஞ்சு ஒண்ணரை இவைகளையிடித்து வடிகட்டி அந்தயிடைக்குச் சீனிகலந்து திரிகடி தேனிலாவது இஞ்சி சாற்றிலாவது கொள்ள அபானவாய்வும் மலர்க்கட்டு நீர்க்கட்டுந்தீரும்.

காற்படி விளக்கெண்ணெயில் ஈருள்ளி ஒருசிரங்கை முடக்கத்தாணிலை ஒருபடி வெள்ளரிவிரை அரைக்கால்படி சத்திச்சாரணைவேர் ஒருபடி இவைகளை மைபோலரைத்துப்போட்டு சிவக்கக்காய்ச்சி வடித்துக்கொண்டு மேற்படி கடுகும் எண்ணெய் வேளைக்கு ஒரு கரண்டி வீதம் பத்தியமாய்ச் சாப்பிட்டுவர மலக்கட்டும் நீர்க்கட்டும் நீங்கும்.

மேற்படி வியாதியால் நீரடைத்தல்.

ஊமத்தை விரையை வெதுப்பி அதற்குநிகர் மேலரிசிகூட்டி தண்ணீர்விட்டரைத்து கீழ்வயிற்றிற் பூச உடனே நீரிறங்கும்.

திப்பிலி கிராம்பு இந்துப்பு வெடியுப்பு வகைக்குக்கழஞ்சு-1 சுக்கு அதிமதுரம் அமுக்கறு ஏலம் வகைக்கு கழஞ்சு-2 தான்றிக்காய் சண்பகப்பூ கோஷ்டம் குருந்தொட்டிவேர் வகைக்கு கழஞ்சு-3 அதிவிடையம் சந்தனம் நெல்லிபருப்பு கல்நார்சீரகம் இலவங்கப்பத்திரி வகைக்குக் கழஞ்சு-4 ஓமம் கழஞ்சு-½ மிளகு விலாமிச்சம்வேர் சிவன்வேம்பு வகைக்கொருபிடி கடுக்காய்-10 இவைகளை தூள்செய்து திரிகடிப்பிரமாணம் தேனில் மத்தித்துச் சாப்பிட்டு இதனடியில் வருகிற தயிலத்தை முழுகிவரத் தீரும். ஷை வியாதிக்கு-தலைமுழுகத் தயிலம்.

மேற்படி பிரயோகத்திற்கண்ட மருந்துகளில் இந்துப்பையும்வெடியுப்பையும் நீக்கி மற்ற மருந்துகளை யிடித்து ஒருபடி நல்லெண்ணெயிற் போட்டுக் காய்ச்சி வடித்து முழுகிவரவும்.

மூலக்கிராணி மூலவாயுவுக்கு லேகியம்.

கறிக்கரணை காட்டுக்கரணை சேமக்கிழங்கு புளியம்பிரண்டைகிழங்கு பேய்ப்பிரண்டை நல்லபிரண்டை வகைக்குப்பலம்-1 திரிகடுகு திரிபலை குராசாணி ஓமம் தாளிச்சபத்திரி சிறுநாகப்பூமுத்தக்காசு கருஞ்சீரகம் பொன்முசுட்டைவேர் சித்திரமூலம் வேர்ப்பட்டை அமுக்கறுங்கிழங்கு வகைக்குபலம்-¼ இவையெல்லாம் இடித்து வடிகட்டிக்கொண்டு சூரணங்கண்ட இடைபனங்கற்கண்டை பாலிற்கலக்கி பாகுசெய்து சூரணத்தைப்போட்டுக்கிண்டி காற்படி நெய்விட்டு லேகியம் குறுகிவருஞ் சமயத்தில் கூகைநீர் சாதிக்காய் சாதிபத்திரி ஏலம் வகைக்கு விராகனிடை-2 தூள்செய்துப்போட்டு தேன் ½-படி கூடவிட்டு கலக்கி மெழுகு பதத்தில் இறக்கிக்கொண்டு ஒருமண்டலங் கொள்ளத்தீரும்.

மூலவாயு அக்கினிமந்தம் பயித்தியவாயு அனந்தவாயுவுக்கு.

சுக்கு மிளகு திப்பிலி சித்திரமூலம் கோஷ்டம் திப்பிலிமூலம் நவாச்சாரம் இந்துப்பு அதிவிடையம் பெருங்காயம் ஓமம் நற்சீரகம் வாய்விளங்கம் வசம்பைச் சுட்டசாம்பல் கரியுப்பு வகைக்குகழஞ்சு-1 இவைகளை நசுக்கிச் சூரணித்து இதற்குநிகர் கடுக்காய்த்தூள் சேர்த்துத் திரிகடிப்பிரமாணம் சாப்பிட்டு வெந்நீர் கொள்ளத்தீரும்.

மூலவாயு மூலம்உண்ட அசனஞ்சமியாததற்கும் கிர்மிக்கும் லேகியம்.

நூறுக்கடுக்காயை வெள்ளாட்டு நீரிலவித்து விரைபோக்கியுலர்த்தி வறுத்துப் பொடித்துக்கொண்டு இவதை சித்திரமூலம் மஞ்சள் சுக்கு திப்பிலி சேங்கொட்டை காரெள்ளு நிலவாகை கரணைக்கிழங்கு பிரண்டை புளியமடற்கிழங்கு வெங்தோன்றிக்கிழங்குசாரணைக்கிழங்குஇவைகள் வகைக்கு பலம்-1 பாலில் அவித்துச் சுத்திசெய்துக்கொண்டு கடுகு பலம்-2 இவைகளையிடித்துச் சூரணஞ்செய்து இரண்டுபடி வெள்ளாட்டுபாலில் ஒருபலம் சர்க்கரைகூட்டி பாகுசெய்து அதில் மேற்படி பொடிகளைத்தூவிக் கிண்டி தேன்படி-½ நெய்படி-1 கூடவிட்டு லேகியஞ் செய்துகொண்டு நாழியொன்றிற்கு இருகழஞ்சுவீதம் ஒரு மண்டலம் கொள்ள மேற்படி வியாதிகள் தீரும் மலசலம் தாராளமாய்ப்போகும் பசிதீபனமுண்டாகும் தாதுவிர்த்திக்கும் கிருமிகளற்றுப்போகும்.

மூலவாயு மூலம் உதரரோகம் இசிப்பு குன்மம் பயித்தியம் சன்னிவாயு உடம்பு வியர்வை பசிமந்தத்திற்கு.

திப்பிலிமூலம் 6-க்கு மிளகு திப்பிலிமூலம் செவியம் சித்ரமூலம் கடுகு வாய்விளங்கம் கருஞ்சீரகம் அசமதாகம் இந்துப்புவெடியுப்பு சவுக்காரம் கொத்தமல்லி சதகுப்பை அதிமதுரம் வெட்பாலையரிசி சாதிப்பத்திரி கிராம்பு தாளிச்சபத்திரி லவங்கப்பத்திரி வகைக்குப்பலம்-1 இவைகளை வெதுப்பிச் சூரணித்து அதற்குப்பாதி சீனிகூட்டித் திரிகடிப் பிரமாணம் தேனிற்குழைத்து 10-நாள் கொள்ளத்தீரும்.

மூன்றுபலம் கருப்புக்கட்டியைத் தண்ணீரிற்போட்டுப் பாகுசெய்து அதில் திரிகடுகு ஓமம் கேசாவரம் குருசாணிவோமம் கருஞ்சீரகம் சிற்றரத்தை சதக்குப்பை வசம்பு வெள்ளுள்ளி அதிவிடையம் பெருங்காயம் ஏலம் கிராம்பு வெங்காரம் பழம்புளி சத்திச்சாரணை வேர்பட்டை நாய்கடுகு வகைக்குவிராகனிடை-3 அரைத்துப்போட்டுக் கிண்டி கொஞ்சம் ஆவின்னெய்விட்டு லேகியஞ் செய்துக்கொண்டு நாழி ஒன்றிற்கு ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவரத் தீரும்.

மூலரோகப்படலம்-முற்றிற்று.

---

# அதிசாரரோகப்படலம்.

அதாவது சாதம்செரியாமல் அக்கினிமீறி வாயுஅதிகரித்து மூலத்தில்வாயு நின்று என்னேரமும் பேதிவிளைவித்தலாம்.

விருத்தம்.

சொன்னார்தொகுப்பு அதிசாரம் தோற்றும்வாதபித்தமென
மன்னே சிலேத்மவதிசாரம் வகுக்குஞ்சனத்தினதிசாரம்
மின்னேரசாத்தியவதிசார மொழிந்தாராயும்வேதமிது
பொன்னேமாந்தர்பிழைக்கவென்று புகன்றார்முனிவர்புகன்றாரே

வாத அதிசாரக்குணம்.

வயிறுபொருமின் பொருமிக்கழிலும் தொப்புளின்கீழ் நோகும் அங்கம் நொந்துவாடும் அயரும் வலங்கருமையாயிருக்கும் நுரைவிழும் காற்றுப்பரியும்

பித்த அதிசாரக்குணம்.

மலம் ஒருநாள் செம்மையாயும் பசுமையாயும் இறங்கும் ஒருநாள் சீதம் இரத்தம்விழும் அபானங்கடுத்துநோகும் எரியும் அரோசியங்காணும் அன்னத்தைத்தள்ளும் வாந்திபண்ணும் தாகம் அதிகரிக்கும வியர்க்கும்.

சிலேத்ம அதிசாரக்குணம்.

மலம் வெண்மையாய்க்கழியும் சீதம் நுரைவிழும் அபானங்கடுக்கும் வயிறு பொறுமும் பிசிக்கும் அரோசியங்காணும் அன்னத்தைத் தள்ளும் இருமல் காணும்.

அதிசார தோஷக்குணம்.

இரத்தம் விழுகும் பிதற்றும் வாந்தியிருக்கும் விக்கலெடுக்கும் தேகநடுங்கும் வயிறுபொறுமும வியர்க்கும் நசிக்கும் அவயவமும மிகுதியாய் குளிர்ந்திருக்குழ் நித்திரைசோபம் அதிகரிக்கும்.

சுரம் அதிசாரக்குணம்.

சுரம் தீவிரமாய்க்காயும் தாகமிகும் பலவிதமாய் வயிறுகழியும் சீதம் இரத்தம்விழும் அரோசிக்கும் அன்னத்தைத்தள்ளும்.

அசாத்திய அதிசாரக்குணம்.

ஊன்போலுக் தேன்போலும் கரிப்போலுந் தயிலம்போலும் வெண்மையாயும் மிகுநாற்றத்துடன் பலவிதமாய்க் கழிச்சல்காணும் இடைவற்றும் சுரநடுங்கும் தேகம்வற்றும் மயக்கங்காணும் நினைவுதடுமாறும் விக்கலெடுக்கும் தொண்டைகம்மும் கைகால் சோர்ந்துநடுங்கும் விழிவிரிந்துவெளுக்கும் உதடுவெளுக்கும் கைகால் மூக்கு நெஞ்சு தொப்புள் குளிர்ந்திருக்கும் அவயவங்களில் நரம்புதோன்றும்.

இவைகட்கு நிவர்த்தி.

பெருமரத்துப்பட்டை இவைகளை யோர்நிறையாயரைத்துத் தயிரிலாவது காடியிலாவது கரைத்துக் கொடுக்கத்தீரும்.

மிளகு அதிவிடையம் சாதிக்காய் சாதிப்பத்திரி சாஸ்திரபேதி லவங்கப்பட்டை முத்தக்காசு இந்துப்பு நற்சீரகம் காசுக்கட்டி மாதுளம்பிஞ்சு வில்வக்காய்ச்சதை பெருமரத்துப்பட்டை அத்திப்பூ மாங்கொட்டைப்பருப்பு அழுஞ்சிவிரைப்பருப்பு வட்டத்திருப்பி வேர்ப்பட்டை இவைகளை வெதுப்பிச் சூரணித்துத் திரிகடிப்பிரமாணம் தேனிலும் மற்ற அனுபானங்களிலுங் கொடுக்கத் தீரும்.

மாங்கொட்டைபருப்பு வயின் கருநாவி கஞ்சாவித்து அதிவிடயம் சாதிக்காய் இவைகளை யோர் நிறையாய்க்கூட்டி சிந்தில் கியாழத்திலாட்டி சிறுபயறு போலுருண்டைசெய்து அனுபானங்களில் விடத்தீரும்.

கஞ்சாபொரிகாரம காரியபற்பம் வயின் சுக்கு கருஞ்சீரகம் குடசப்பாலை கழற்பருப்பு அதிவிடையம் யோர்நிறையாய் ஊமத்திச்சாற்றாலாட்டி கழஞ்சிப்பிரமாணம் உருண்டைசெய்து தேனில் கொடுக்கத்தீரும்.

குடசப்பாலை அதிவிடயம் கோரைக்கிழங்கு சாதிக்காய் சுக்கு வயின் கஞ்சா கழற்பருப்பு இலவம்பிசின் சீரகம் மாங்கொட்டைப்பருப்பு வில்வப்பழம் இவைகளை யோர்நிறையாய் எலுமிச்சம்பழச்சாற்றாலாட்டி கழற்சிப்பிரமாணம் உருண்டைசெய்து தேனில் கொடுக்கத்தீரும்.

கடுக்காய்க் கறிதுணியைசுட்டசாம்பல் விலாமபிசின் இலவம்பிசின் இவைகளை யோர் நிறையாய் வத்திப்பட்டைச் சாற்றாலரைத்து தான்றிக்காய்ப் பிரமாணம் உருண்டைசெய்து தேனில்கொடுக்கத்தீரும.

மலைதாங்கிவேர் கோரைக்கிழங்கு அத்திவேர்ப்பட்டை நீர்ப்பூலாவேர்ப்பட்டை நாவல்வேர்ப்பட்டை மாதளம்பிஞ்சித்தோல் வயின் அத்திப்பிஞ்சு மாம்பருப்பு அதிமதுரம்கோஷ்டம் சுக்கு சீரகம் சாதிக்காய் இவைகளை யோர் நிறையாய்த் தென்னம்பாளைச்சாற்றால் மூன்றுநாளாட்டி தேற்றாவிரைப் பிரமாணம் உருண்டைசெய்து வாழைப்பூச்சாற்றில் ஒரு உருண்டைகொடுக்க தீரும்.

மாதுளம்வேர்ப்பட்டை கூவிளைவேர்ப்பட்டை மாங்கொட்டைப்பருப்பு குரூசாணி ஓமம் சாதிக்காய் சாதிப்பத்திரி அதிவிடையம் லவங்கம் திரிகடுகு கஞ்சா வெப்பாலையரிசி கடுக்காய் கரிகோஷ்டம் நற்சீரகம் காயம் கொன்றைவேர்ப்பட்டை திப்பிலிமூலம் வெந்தியம் சித்தி மூலம் காட்டாத்திப்பூ புளியவிரைத்தோல் ஊமத்தைவிரை கழற்பருப்பு இவைகள் சமமாய்ப் பொடித்துத் திரிகடிப்பிரமாணம் தேனிற்கொடுக்கத்தீரும்.

ஓமத்தைவெதுப்பித் தேய்ந்த உமிர்போக்கி அதற்குநிகர் காட்டாத்திப்பூ கூட்டி திரிகடி இஞ்சிச்சாற்றிற் கொள்ளத்தீரும்.

சாதிக்காய் சாதிப்பத்திரி கிராம்புகோஷ்டம் சீரகம் அதிமதுரம் அதிவிடயம் அபின் கோரோசனை வகைக்குவிராகனிடை மூலைப்பாலிலிழைத்துசுண்டக்காய்ப் பிரமாணம் உருண்டைசெய்துக்கொண்டு ஒருசட்டியில் சுக்கு ஓமம் மிளகுவகைக்கு விராகனிடை-1 வறுத்துக் கொட்டிக்கொண்டு அந்தச்சட்டியில் இலந்தையிலை ஒருபிடிபோட்டுவதக்கி மேற்படிமூன்றுவகைமருந்தையும் தட்டிப்போட்டு ஒருபடிதண்ணீர்விட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்து அதில் மேற்படி மாத்திரையொன்று உரைத்துக் கொடுக்கவும இப்படிமூன்று நாள் கொடுக்க அதிசாரந்தீரும.

ஆவாரையிலையைவதக்கி மேற்படிமூன்றுவகை மருந்தையும முன்போற் கியாழஞ்செய்து மாத்திரை ஒன்று உரைத்துக்கொடுத்தாலும அல்லதுவிடத்தில்லையும மேற்படி மருந்தையும முன்போற் கியாழஞ்செய்து மாத்திரை ஒன்று உரைத்துக்கொடுத்தாலும வயிற்றுக்கடுப்புதீரும.

அதிசாரரோகப்பட்டலம்-முற்றிற்று.

# கிராணிரோகப்படலம்.

—————(-)—————

அதாவது குடலில்வாயு அதிகரித்து பவனவாயில் கடுப்புண்டாகி பலவித மான கழிச்சல் அதிகரித்தலாம்.

விருத்தம். கூறுமூலக்கிராணியெனக் குறிக்கும் வாதக்கிராணியென்றும்
தேறும்பித்தக்கிராணியென்றும் தெளியும்சிலேத்மக்கிராணியென்றும்
கோறுஞ்சீழுக்கிராணியென்றும் குறிக்கும்நீரின்கிராணியென்றும்
ஆறுங்கிராணி பிறந்தவிதம் அறைந்தார்முனிவரறைந்தாரே

மூலக்கிராணி சீழ்க்கிராணி நீர்க்கிராணி வாயுங்கிராணி
சூசிகாகிராணி அசீரணகிராணி மூலக்கிராணிகுணம்.

கீழ்வயிறு கடுத்துளைந்து குறிகிவிழும் அபானவாயு கீழ்நோக்கி உறுப்புத் தள்ளும் மலங்கழியும் நாளுக்குநாள் உடல்வற்றும் வயிறுநோகும் நாவரளும் இளைப்பு சோபதாபம முண்டாகும்.

வாதமூலக்கிராணி குணம்.

மலங்கழியும் சீதம் ரத்தம்விழும் தொப்புளில் சுருக்கென்று வலிக்கும் நோவும்.

பித்தமூலக்கிராணிக் குணம். மலம்சிறுத்துகழியும் பலவிதமாய்நாறும்.

சிலேத்மமூலக்கிராணிக்குணம். உதிரமாயும் வெண்மலமாயும்கழியும் காற்று பறியும். இவைகட்கு நிவர்த்தி.

திப்பிலிசுக்கு மிளகு சாதிக்காய் கிராம்பு இந்துப்பு ஏலம்சீரகம்பெருங்காயம் வேலம்பிசின் மாம்பிசின் இலவம்பிசின் முத்துக்காசு புளியவிரைத்தோல் மாதுளங்தோல் அபின்வகைக்கு விராகனிடை-¼ பொடித்து இதற்குநிகர் சுத்தி செய்த கஞ்சாத்தூள்கூட்டி நாழிகையொன்றிற்கு ஒருவிராகனிடை வீதம் தேனிற்கொள்ள மூலக்கிராணி தீரும்.

மஞ்சள்பிரண்டை வெள்ளைப்பூண்டு சுக்குமிளகு வகைக்குவிராகனிடை அரை மைபோற்பொடித்து ஒருகோழிமுட்டைக்கருவிற் பொரித்து சாப்பிடத் தீரும்.

அதிவிடையம் கிராம்பு சுக்கு திப்பிலி சீரகம் ஓமம் யானைத்திப்பிலி ஏலம் லவங்கப்பட்டை திமதுரம் அபின் இந்துப்பு அத்திவிரைகழற்பருப்பு கோஷ்டம் நெல்லிமுள்ளி மாம்பருப்பு காசுக்கட்டி கருங்குங்கிலியம் களிப்பாக்கு வில்வப்பழத்தை விளாவிரை பெருமரத்துப்பட்டை மலைதாங்கிவேர் சிருகஞ்சோரிவேர் கொடிவழுதலைவேர் சிறுவழுதலைவேர் புளியவிரைத்தோல் வில்வப்பிசின் விளாய்ப்பிசின் வெளிச்சிப்பிசின் கம்பிப்பிசின் மருதம்பிசின் உதியம்பிசின் கிளுவைப்பிசின் வீத்திப்பிசின் சண்பகப்பூ வகைக்குப்பலம்-1 பொடித்துகொண்டு இலவம்பட்டை மாம்பட்டை வேலம்பட்டை அத்திப்பட்டை ஒதியம்பட்டை மருதம்பட்டை வகைக்குப்பலம்-1 இடித்து 4 படி தண்ணியிற்போட்டு அரை படியாய் வற்றவைத்து வடித்த கஷாயத்தாலாட்டி கழற்காய்ப்பிரமாணம் உண்டைசெய்து 69-நாழிகைசென்ற எருமைத்தயிரை வடிகட்டியதில் ஒருண்டை கொடுக்கமூலக்கிராணிதீரும்வெள்ளாட்டு நெய்யிற் காலக்கிராணிதீரும் ஒருபிடி காரையில் ஒருபடி எருமைமோர்விட்டு உழக்காய்காச்சி வடித்து அதில் ஒருண்டையையரைத்து நல்லெண்ணை ஒருகாசிடைவிட்டுக் கொடுக்க சகலக்கிராணியும் நீங்கும்.

உப்பையரைத்து ஒருதலை வெள்ளைப்பூண்டின் மேற்பூசி உமிர
காந்தலில் வெதுப்பி உப்பையும் தோலையும் மூளையையும் நீக்கியரைக்
த்துத் தயிரிற்கலக்கிக்கொள்ளத் தீரும் கடுப்புநீங்கும்.

பிரண்டைவேர்பொடி சுக்குமிளகுகடுகு வெள்ளைப்பூண்டுஓமம்
கருஞ்சீரகம் கருவேப்பிலை பெருங்காயம்இந்துப்புவகைக்குப் பலம்
க-ஒரு கருங்கோழியை இறகுகுடல் தலைகால்நீக்கி சற்றேவேகவை
த்து எலும்புகளைந்தமாமிசம் இவைகளைத் தனித்தனியே பிரண்டை
சாற்றால் மைபோலரைத்து ஒன்றாய்ப்பிசரி பிலைதட்டி நல்லெண்
ணெயில் வேகவைத்து அந்திசந்தி சாப்பிட்டுவரத்தீரும்.

கொட்டாங்கரந்தையுஞ் சீரகமும் ஓர்நிறையா யரைத்து பில்லை
தட்டி நல்லெண்ணெயில் வேகவைத்துத் தின்னத்தீரும்.

அத்திப்பட்டை ஆயிற்பட்டை வரபூலாவேர்ப்பட்டைநாவற்
பட்டை நெல்லிப்பட்டை இவைகளைச் சமபாபிடித்துப்பிழிந்தசாறு
படி-வ சாதிக்காய் வாசி கிராம்பு திப்பிலிவகைக்கு விராகனிடை-க
எலம்விராகனிடை- உ சுக்குமிளகு வகைக்குப்பலம் இவைகளைமேற்
படி சாற்றாலரைத்துக்கலக்கி ஆவினெய்படி-வ கூடவிட்டு வேகவை
த்து லேகியமாய் செய்துக்கொண்டு நாழியொன்றிற்கு ஒருகொட்
டைப்பாக்குப் பிரமாணம் கொள்ளத்தீரும்.

பாவட்டையிலை பலம்-சா வெள்ளைப்பூண்டு சுக்கு வகைக்குப்ப
லம்-ரு மிளகுபலம்-வ வட்டத்திருப்பி வெட்பாலையரிசி திப்பிலிதே
சாவரம் அத்திதிப்பிலி கொடுவேலிவேர் பெருங்காயம் கிராம்பு சா
திக்காய் இந்துப்பு வெடியுப்பு பொட்டிலுப்பு நவாச்சாரம் வகைக்கு
ப்பலம்-உ ஓமம்பலம் அரைக்கால் இவைகள் பாவட்டையிலையைநல்
லெண்ணெயிலரைத்தும் மற்றசரக்குகள் மோர்விட்டரைத்தும்ஒன்றா
ய்க்கலந்து கொதிக்கவைத்து நல்லெண்ணெபடி அரைக்கால் கூடவி
ட்டு லேகியஞ்செய்து ஒரு கொட்டைப்பாக்குப் பிரமாணம் இரு
போது சாப்பிட்டுவரத்தீரும்.

புளியாரைச்சாறு குறுணி ஆவினெய்படி-உநாழிதயிர்அதிவிட
யம் திரிகடுகு இந்துப்புபெருங்காயம நவாச்சாரம் சாதிக்காய்வெட்
பாலையரிசி திப்பிலிமூலம் கிராப்பு மரமஞ்சள் லவங்கம் வகைக்குக்
கழஞ்சி-கூ அரைத்துப்போட்டுக் காய்ச்சி ஒருகரண்டிவீதங் கொள்
ளத்தீரும்.

மூலக்கிராணி அதிசாரத்திற்கு.

பூனைக்காலிவித்து ஈரபற்பம் அதிவிடையம்அத்திப்பூகழற்காய்
ப்பருப்பு சாதிக்காய் ஊமத்தம்வித்துசுக்குநாவி கஞ்சாவித்து மாங்
கொட்டைப்பருப்பு அதின் வில்வப்பழச்சதை கொன்றைவேர்ப்ப
ட்டை மாதுளத்தோடுபொன்முசுட்டைவேர்ப்பட்டைஏலம்ஓர்நிறை
யாய்ச் சீந்தில்சாற்றாலாட்டிச் சுண்டக்காய்ப் பிரமாணம் உருண்டை
செய்து தேனிற்கொள்ளத்தீரும்.

## வாயுகிராணிக்குணம்.

உண்டஅசனஞ்சமியாத வயிறுநோகும் பொருமும் இரைந்து கழியும்புளியேப்பம்விடும் இருமும் வாயுபரியும் நாட்சென்றால்புறந் தள் அசைத்துவற்றும் போசனஞ்செல்லாது உடல்வரண்டு வற்றி வரும் நாவரளும் தாகமிகும் கனவுகாணும் வெருவும்.

நிவர்த்தி.

மேற்றோல்சீவி யுலர்த்தின இஞ்சிபலம்-ம ஏலம் லவங்கம் மதுரம் கிரிகடுகுதிரிசாதம் இந்துப்புஓமம் அதிவிடயம் வகைக்குக் கழஞ்சு-க இவைகள் ஆவினெய்விட்டுப் பொன்னிறமாய்வெதுப்பிச்சூரணித்து அதில்பாதி வெள்ளைச்சர்க்கரைகூட்டித்திரிகடிப்பிரமாணம் சாப்பிடத்தீரும் புளியும் காப்பன்பதார்த்தமுந் தள்ளவும்.

சேங்கொட்டை திரிபலைகொடுவேலிவேர் வகைக்கு கழஞ்சு-உ இந்துப்புகழஞ்சு-ம இவைகளை இடித்துச் சிறுசட்டியிற்போட்டுமூடி ஏ-சீலைமண்செய்து குக்குடம்போட்டுப்பொடித்துக்காசிடைஆவின் வெண்ணெயிற்குழைத்துக்கொள்ளத்தீரும் பத்தியமாயிருக்கவும்.

அதிவிடயம் பெருங்காயம் சிறுநாகப்பூ திப்பிலி சாதிப்பத்திரி வகைக்குக்கழஞ்சு-ந ஆனைதிப்பிலிகழஞ்சு-ச சுக்கு கடுகு வெள்ளுள்ளி வகைக்குக்கழஞ்சு-அ நாய்கடுகு திப்பிலிமூலம் வகைக்குகழஞ்சு ம அபினிகழஞ்சு-உ இவைகள்வெதுப்பித் தூள்செய்து வெள்ளைச்சர்க்கரை ரு-பலம்கூட்டிக் கலந்துகொண்டு அந்திசந்தி திரிகடிப் பிரமாணம் முத்தக்காசுக்கும் சேர்த்துசெய்த கியாழத்திலாவது இஞ்சிச்சாற்றிலாவது கொள்ள ஆறுவகைகிராணியுந் தீரும்.

சுக்கு மிளகு வெள்ளைப்பூண்டு கஸ்தூரிமஞ்சள் சீரகம்ஓமம்சதச்சாரணைவேர் குப்பைமேனிவேர் வகைக்குப்பலம்-க பிரண்டைச்சாற்றாலாட்டி நல்லெண்ணெவிட்டு லேகியஞ்செய்து கொட்டைப்பாக்குப் பிரமாணஞ் சாப்பிட்டுவரத்தீரும்.

சுக்குபலம்-க திப்பிலிபலம்-வ மிளகுபலம் அரைக்கால் ஓமம் பலம்-க பூண்டுபலம் இவைகள் ஒன்றாகவெதுப்பி யிடித்து அவை கண்ட இடைக்குப்பாதி ஆடுதீண்டாப்பாளைச் சூரணங்கூட்டி கழற்காய்ப்பிரமாணம் இரண்டுநேரமும் சாப்பிட்டுவரத்தீரும்.

கொடிவேலி திரிகடுகு ஓமம் சிறுதேக்கு ஆனைத்திப்பிலிகோஷ்டம் இருவகைஉப்பு வகைக்குப்பலம்-க பெருங்காயம் வசம்புசுட்டதரி வகைக்குப்பலம்-வ கடுகுபலம்-ஒ இளவறுப்பாய்ச் சூரணித்து அதற்குநிகர் வெள்ளைச் சர்க்கரைகூட்டி திரிகடிப்பிரமாணம் வெந்நீரிற் கொள்ளத்தீரும்.

சட்டியை நன்றாய்க்காயவைத்து ஒருபிடி உப்பிட்டுக் கருகவறுத்துக் கொட்டிப்போட்டு அதில் ஒருபிடி பிரண்டைக்கொழுந்தையரிந்துபோட்டு கருகவறுத்து ஒருபிடி எருமைமோர்விட்டு வற்றவைத்

திருக்கூ அதிவிடயம் உள்ளி திரிகடுகு ஓமம் வசம்பு இவைகள் வகைக்கு விராகனிடை-க வெதுப்பிப் பொடித்துப்போட்டுக் கொடுக்கத்தீரும்.

ஓமத்தைக்கருவறுத்துத் தேய்த்து உமிபோக்கிப் பொடித்துத் திரிகடிப்பிரமாணம் தேனிற்கொள்ளத்தீரும்.

வாரிகிராணிக்கும் ஊஷ்ணத்தின்பேரில் காணும்பேதிக்கும்.

நூறுவருஷஞ்சென்ற வேப்பம்பட்டை விராகனிடை-சய மிளகுவிராகனிடை-உய இடித்துச் சூரணஞ்செய்து சர்க்கரை விராகனிடை-ஙய இவைகள் ஒன்றாய்க்கூட்டி பொன்றிற்கு இரண்டுவிராகனிடைவிதம் எ-நாள் கொள்ளத்தீரும்

சங்கிராணிக்குணம்.

வயிறாதும் சீழ்போலும் சீதம்போலும் நெய்போலும்வெந்நீர்போலும புலால்கழுவின தண்ணீர்போலும் பலவிதமாய்க் கழியும் அபானங்கடுக்கும்.

நிவர்த்தி.

அத்திப்பிஞ்சு வாழைப்பிஞ்சு மல்லிசீரகம் முத்தக்காசு வில்வவேர் பேராமுட்டிவேர் இவைகளை ஓர்நிறையாயிடித்து கியாழஞ்செய்து கொடுக்கத்தீரும் வாதங்கதித்திருந்தால் சுக்கும்திப்பிலியும்மேற்படி கியாழத்துடன் கூட்டிக்கொள்ளவேணும்.

திரிகடுகு திரிபலை வாய்விளங்கம் கடுகுரோகணி அதிவிடயம் ஓமம் குருசாணிஓமம் நற்சீரகம் இந்துப்புபலம் செங்கழுநீர்கிழங்கு கோஷ்டம் கிராம்பு காசுக்கட்டி வெள்ளுள்ளிசாரணைவேர்ப்பட்டை சாதிக்காய் சாதிபத்திரி வாலுளுவை அதிமதுரம்வகைக்குவிராகனிடை சு-இவைகள் இளவறுப்பாய்ச் சூரணித்து திரிகடிப் பிரமாணம் தேனில் எ-நாள் கொள்ளத் தீராசுழிச்சலுந் தீரும்.

இரத்தகிராணிக்குணம்.

அடிவயிறுவலிக்கும் நெஞ்செரிவும எப்பம்பரியும் தாகிக்கும் சலமாயும் இரத்தமாயும் தண்ணியாயுங்கழியும் உண்டிஅசனம் சமியாது அபானங்கடுக்கும் உடல்கடுக்கும் கால்கைவோயும்.

நிவர்த்தி.

பெருமரத்துப்பட்டை முத்தக்காசு வகைக்குப்பலம்-அ விதம் இடித்து உ-படி தண்ணீரிற்போட்டு அறைக்கால்படியாய் வற்றவைத்துக்கொடுக்கவும் இந்தப்படி ஆறுபோது கொடுக்கத்தீரும்

சாதிக்காய் சாதிலிங்கம் சீரகம் சுக்கு கிராம்பு இலவம்பிசின் அபின் இந்துப்பு சமுற்பருப்பு ஊமத்தின்வித்து இவைகள்ஓர்நிறையாய்வெதுப்பி எலுமிச்சம்பழச் சாற்றாலாட்டி மாதுளங்காய்க்குள் வைத்து அவிபுடம்போட்டுத் தேனுடன் தயிர் வார்த்தரைத்துக் குன்றிபோலுண்டைசெய்து வாழைப்பூச்சாற்றில்விடத்தீரும்.

கிராணியின்பேரிற்காணும்

பாண்டுவிஷபாக வீக்கத்திற்கு.

அரப்பொடி சிட்டம் காந்தம் கடுக்காய் மேற்றோல் நெல்லிமுள்ளி கருஞ்சீரகம் நற்சீரகம் பூண்டு பெருங்காயம் திரிகடுகுவகைக்குவிரா

கனிடை-ஙு இவைகள்வறுத்துச் சூரணித்து திரிகடிப் பிரமாணம் அந்திசந்தி ம-நாள் கொள்ளத்தீரும்.

அஜீரண கிராணிக்கு.

வேப்பீர்க்கு ஒதியீர்க்கு சுக்குசீரகம் ஓமம் இவைகள் வகைக்கு ப்பலம் அரைவீதம் வெதுப்பி ஒருபடி தண்ணீரிற்போட்டு அரைக் காற்படியாய் வற்றவைத்துக் கொடுக்கவும் இந்தப்படி ஆறுபோது கொடுக்கத்தீரும்.

திரிகடுகு கருஞ்சீரகம் நற்சீரகம் நவாச்சாரம் அதிவிடையம் இவைகள் ஓர்நிறையாய்வெதுப்பி கல்வத்திட்டுப் பொடித்துநல்லெண் ணெய்விட்டு லேகியம்போ லரைத்துக்கொண்டு நாழியொன்றிற்கு ஒருகொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவரத்தீரும்.

வெள்ளறுகும் குப்பைமேனியுஞ் சமனாய்சூரணித்துத் திரிகடிப்பிரமாணம் ஆவிநெய்யிற் கொள்ளத்தீரும்.

சகலகிராணிக்கும்.

இந்துப்புகாயம் வளையலுப்பு வெள்ளுள்ளி சுக்குதிப்பிலிஓமம் மிளகு சவுட்டுப்பு சித்திரமூலம் இவைகள்பிரமிச்சாற்றிலாவது எலு மிச்சம்பழச்சாற்றிலாவது அரைத்துக்கொண்டு ஒருஉடும்பைத்தலை கால் குடலதோல்நீக்கி அதில் வயிற்றுக்குள் வைத்துத்தைத்துமடக் கிக்கட்டிப் பிட்டுப்போலவித்துக் காயவைத்து இடித்துச் சூரணம் பண்ணி திரிகடிப்பிரமாணம் ஒருமண்டலங் கொள்ளத்தீரும்.

கோவைத்தண்டையிடித்து மேற்றோலைதள்ளி நீர்சுவறவருத்து தூள்செய்து ஓமத்தைவறுத்துத் தேய்த்துச் சூரணித்து இருவகை யும் ஓர்நிறையாய்கலந்து நல்லெண்ணெயிற் கொட்டைப்பாக்குப் பிர மாணம் கொள்ளத்தீரும் பத்தியம் பால்சோறுகொடுக்கவும்.

ஒருவிராகனிடை காரீயத்தைச்சட்டியில் உக்கிரம்விராகனிடை ச-கூட்டித் தொந்தித்துக்கல்வத்திட்டுநீ காந்தம் விராகனிடை-கூ கெ ந்தி விராகனிடை-உ வெள்ளைத்துத்தம் விராகனிடை-ச சேர்த்து ச சாமம் அரைத்து வைத்துக்கொண்டு பஞ்சமூல கியாழத்திலும்மற்ற அனுபானங்களிலுங் கொடுக்கத்தீரும்.

காந்தம் லிங்கம் கல்மதம் சாதிக்காய் சாதிப்பத்திரி சருவாம் பிசின் மாதுளம்பிஞ்சு இவைகளை ஓர்நிறைபாய் அத்திப்பால் விட்ட ரைத்துக் காசிடையாக உண்டைசெய்து வெல்லத்தில் கொடுக்கத் தீரும்.

சாதிக்காய் சாஸ்திரபேதிகல்மதம் அபின் இவைகள் ஓர்நிறை யாய் அத்திப்பால் விட்டரைத்துக் குன்றிபோலுண்டைசெய்து வெ ந்நீரில் உரைத்து கொடுக்கத்தீரும்.

நாவற்பட்டை அரசம்பட்டைஅத்திப்பட்டை கருங்காலிப்பட் டை ஒதியம்பட்டை வகைக்குப்பலம்-மஇடித்துஐந்துமரக்கால்தண் ணீயிற்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து அதில் பனைவெல்லம்

பலம்-ம கட்டிப்போட்டு பாகுசெய்து சுக்குசீரகம் மிளகு ஓமம் ஏலம் கோரோசனை குறுசாணிவோமம்சற்கடகச்சிங்கிராம்புநல்லி திப்பிலி சாதிப்பத்திரி சாதிக்காய் அதிவிடயம் வகைக்குப் பலம்-க அரைத்துப்போட்டுக் கிண்டி ஆவினெய் தேன்விட்டு லேகியஞ்செய்துக்கொண்டு நேரமொன்றுக்கு கொட்டைப்பாக்குப்பிரமாணஞ்சாப்பிட்டுவரத்தீரும்.

சீதம் விழுதலுக்கு.

அமுக்கறாவேரும் இந்துப்பும் சமமாய்ப் பொடித்துத் தேனில் மத்தித்துக் கொடுக்கத்தீரும்.

இரத்தக்கிராணி சலக்கிராணி எறுப்புச்தள்ளும் மூலச்சூடு
வயறிரைத்தல் வாயு அன்னஞ்செரியாமை பொருமல்
விஷநீர் தொப்புள்சுற்றி வலுத்தலுக்கும்.

திரிபலை முத்தக்காசு வெள்ளகுங்கிலியம் திரிகடுகு கோஷ்டம் சீரகம் அதிமதுரம் சாதிக்காய்கிராம்பு ஏலம்வெட்பாலையரிசிஅபின் தேவதாரம் கூகைநீர் வல்லப்பிஞ்சு பருத்திவிரை பருபபு அத்திப் பிஞ்சு கல்வல்லிறைப்பருப்பு புளியங்கொட்டைமேற்றோல் மாதுளம் பிஞ்சு பொன்முசுட்டைவேர் ஆவாரைவித்து கஞ்சாவித்து கற்கடக சிங்கி அதிவிடயம் இலவம்பிசின்விளாம்பிசின் நன்னாரிவேர்பட்டை நிலப்பனைக்கிழங்கு கடலிராஞ்சிப்பட்டை பெருமரத்துபட்டை மரமஞ்சள் வகைக்குகழஞ்சு-க வெதுப்பி பொடித்துக்கொண்டு வெள்ளாட்டுப்பால் எருமைத்தயிர் வகைக்குப்படி-கஒன்றாய்க்கலந்துகருப்புக்கட்டி பலம்பத்து பொடித்துப்போட்டு பாகுசெய்து மேற்படி பொடியைத் தூவிக்கிண்டி நல்லெண்ணைபடி அரைவிட்டு லேகியஞ் செய்து சுண்டக்காய்ப்பிரமாணம் லேகியத்தில் அரைக்காந்தைசெந்தூரத்தைவைத்து ச-நாள் கொள்ளத்தீரும்

*மேற்படி கருப்புக்கட்டியைப் பாகுசெய்யும் போது ஒருபடிக் கஞ்சாசாறுவிட்டுக் கொள்ளலாமென்றும் சொல்லப்பட்டிருக்கின்றது அகத்தியமானால் விட்டுக்கொள்ளலாம்.

சுகலகிராணிகழிச்சல் வயிற்றுகடுப்பு உளைவு அசீரணம்
பித்தம் நீர்ச்சிறுப்பு பிரமேகத்திக்கு.

செங்கழுநீர் கொட்டிநெய்தல் அல்லிதாமரை நிலப்பனை அமுக்கறா நீர்வள்ளி நன்னாரி வோரிலைத்தாமரை வில்வம்மாதுளை வாழை காணை வெருகு மலைதாங்கி கற்றாழைசங்கு சித்திரமூலம்இவைகளின் மூல மருத்தக்காசு அதிவிடயம் தக்கோலம் அதிமதுரம் கோஷ்டம் ஆவாரைபஞ்சமூலம் வகைக்கு-வ பலமாக இவைகளைஉலர்த்திஇடித்துச்சூரணித்து இரண்டுபடி ஆவின்பாலில் கருப்புட்டிபலம் பத்து போட்டு பாகுசெய்து இதில்மேற்படிசூரணங்கள் தூவிக்கிண்டிநெய் படி-க தேன்படி-ஹ கூடவிட்டுலேகியஞ்செய்துநாழிகையொன்றிற்கு ஒருகொட்டைபாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவர நீங்கும்.

கிராணிகழிச்சல் அபானக்கடுப்பு எரிப்புஉதப்புஈளைகாசம்.
பிரமியம் எலும்புருக்கி உள்ளுருக்கி தாதுபுஷ்டி இவைகட்கு.

கூவிளை மாதளை அத்தி ஆத்திமருது ஆல்அருகு அத்திபரித்தி யூரவாரை இலவுஇலந்தை சொன்னைமுருங்கை அத்திமா கோவை வேம்புமுசட்டைகதலி அழிஞ்சிமாதுளை அணிச்சை யாதளை விளாத்தி அவைரஞ்சுசிரம் அதிமதுரம் வகைக்குப்பலம்-க இவைகள்உலர்த்தி இடித்துசூரணித்து இரண்டுபடியாவின்பாலில் சர்க்கரை கற்கண்டு வகைக்குபலம்-ஹ தேன்படி-ஹ விட்டு லேகியஞ்செய்துவைத்துக்கொண்டு கொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவர நீங்கும தாதுபுஷ்டி உண்டாகும்.

வெளுமைகழிச்சலுக்கு.

வெண்குன்றிபருப்பு புளியவிரைத்தோல் வகைக்கு விராகனிடை-க வீதம் மைபோற்பொடித்து எருமைவெண்ணெயிற் குழைத்துண்ணவும் இப்படி சு-போது கொள்ளநீங்கும்.

நீர்கழிச்சலுக்கு

சாதிக்காய் சாதிப்பத்திரி கிராம்பு சாதிலிங்கம் ஊசிக்காந்தம் அபின்வகைக்குக் கழஞ்சு-உ மூன்றுநாளரட்டி செய்பிலடைத்துக்கொண்டு அனுபானங்களில் நாழிபொன்றிற்கு அரை விராகனிடை வீதங்கொள்ள நீங்கும்.

சகலகழிச்சலுக்கு.

ஆவாரம்பூ யாவாரையல்லி யாவாரையரிசி யாவாரங்கொழுந்து யாவாரைவேர்பட்டை வகைக்குபலம்-ஹ இவைகளைச் சிதைத்து உ-படி தண்ணீரிற்போட்டுஓரிரவில ஊறவைத்துக்காலையில்அரைக்காற்படியாய் வற்றவைத்து அதில்கல்லூர்கள்பலம் கிராம்புசாதிப்பத்திரி வகைக்குக்கழஞ்சு- அரைத்துக் கலக்கிக் கொடுக்கநீங்கும்.

அத்திப்பிஞ்சு அதிமதுரம்ஓமம் இந்துப்புஈருள்ளி மிளகுசுக்கு சீரகம் ஒர்நிறைபாய் யாவிநெய்யில் வேகவைத்துப் பதத்தில் வடித்துக்கொள்ளத்தீரும்.

விளாம்பிசின் இலவம்பிசின் கருவேலம்பிசின் தேற்றுவிரைநெல்லிமுள்ளி காசுகட்டி புளியவிரைத்தோல் வாகைவிரை அமிர்தசக்கரை அல்லிவிரை வகைக்குக்கழஞ்சு சந்தனம்விராகனிடை-சு யாவாரைவிரை சீனிசர்க்கரை வகைக்கு விராகனிடை-கஉ இவகளையிடித்துத் தாழைவிழுதுச் சாற்றிலும் வாழைப்பூச் சாற்றிலு மரைத்து இலந்தக்கொட்டைப் பிரமாணம் உண்டைசெய்து தேனிலாவது எருமைமோரிலாவது கொள்ள உட்கார்ச்சல் தாகம் மேகசலக்கழிச்சல் நீங்கும்.

வயிறு இரைந்து கழிதலுக்கு.

திரிகடு வெந்தயத்தை நல்லெண்ணெயிட்டு வறுத்துச் சிவந்துவருகிறபருவத்தில் யாவாரையிலை ஒருபிடிகூடப்போட்டு வறுத்துத்

தருகிவருகிற பதத்தில் எருமைமோர்-௧ படி விட்டுக்காய்ச்சி யிறத்துக்கொடுக்க நீங்கும்.

மூலக்கழிச்சலுக்கு.

ஒருதலை வெள்ளைப்பூண்டு கஞ்சாவிரையும் ஓர்நிறையாய்வெதுப்பி நல்லெண்ணெயும் கொஞ்சம் தென்னங்கருப்புக்காடியுஞ் சேர்த்து லேகியம்போலரைத்து எலுமிச்சங்காய்ப் பிரமாணம் மூன்றுநாளையிற் கொள்ளநீங்கும்.

கழிச்சல்சுரத்திற்கு அபின்மாத்திரை.

அபின்விராகனிடை-௬ சுக்குவிராகனிடை-௭ திப்பிலிவிராகனிடை-௮ சீரகம்விராகனிடை-௯ மிளகுவிராகனிடை-௧ இவைகளைவிஷ்ணுமூலி கியாழத்தில் நாலுசாமம் அரைத்துக் குன்றிப்பிரமாணம் மாத்திரை செய்துக்கொண்டு வில்வம்விஷ்ணுமூலி சீரகம்வெற்றிலைக்காம்புஇவை யோர்நிறையாய் தாபசுரம்நீங்கவும் புளிதள்ளவும் இவை சிறியோருக்கும் உபயோகப்படும்.

கழிச்சலுக்கு.

விளாப்பிசினைப் பொடித்து எருமைத்தயிரில் மூன்றுநாள்கொடுக்கத்தீரும்.

மந்தம் அதிசாரம் கிராணிக்கு.

இந்துப்பு ஓமம்கிராம்பு சுண்டையிவற்றல் சாதிக்காய்சாதிப்பத்திரி அபின்காந்தம் நற்சீரகம்ஏலம் திரிகடுகு லவங்கப்பட்டை கருஞ்சீரகம் மாங்கொட்டைபருப்பு அதிவிடயம்வகைக்குவிராகனிடை கோரக்கர்மூலி விராகனிடை-௧௮ இவைகளில் காந்தம் லிங்கம்கஞ்சாயிம்மூன்றையும் சுத்திசெய்து மற்றமருந்துகளை வெதுப்பிப்பொடித்துச் சீனிபலம்-௩ கூட்டித்தேன் பிடித்துப்பிசைந்து கொட்டைப்பாக்குப் பிரமாணஞ் சாப்பிட்டு வெந்நீர் குடிக்கத்தீரும்.

சகலகழிச்சலுக்கும் காந்தசெந்தூரம்.

காந்தம்பலம்-௪ யவாரைவேர்பட்டைபலம்-௪ இவைகளைபொடித்துக் கற்றாழைமடல் தண்ணீர்வார்த்தரைத்து பில்லைகட்டிக் காயவைத்துச் சட்டியிலிட்டுச் சீலைமண்செய்து நாலுசாமமாக யெரித்துயாற்றியெடுக்கச் செந்தூரமாகும் அதில் பணவிடைவீதம் அனுபானங்களிற் கொடுக்கத்தீரும் பத்தியம் எருமைபால் மோர்கூட்டிக்கொள்ளலாம்.

வயிற்றுக்கடுப்பின் குணம்.

முந்திமலங்கழிந்தடங்கும் சிலயாந்தம் இடுப்புக்கும் வயிருனையும் அன்னஞ்செல்லாது அகம்மெலிந்துளரும்.

நிவர்த்தி.

விடத்தில்லை வெட்பூலா நீர்பூலா இவைகளில் மேல்தோல் ஆல்விழுதின்கொழுந்து வகைக்கு ஒருபடிவீதம் ஒன்றாய்சிதைத்து கியாழஞ்செய்தாவது அல்லது இவைகளை அரைத்து எருமை மோரிலாவது தயிரிலாவது கலக்கி கொடுக்கத்தீரும்.

முத்தக்காசையிடித்து மாவாக்கிப் பிட்டவித்துப்பிழிந்து தண்ணீர்ப்படி அரைக்கால் ஒருவிராகனிடை ஓமத்தைவறுத்துப் பொடித்துபோட்டுக் கொடுக்கத்தீரும்.

நற்சீரகம் பலம்-ஏ இளவருப்புச்செய்து பொடித்து வடிகட்டி சர்க்கரைப்பலம்-க கூட்டித் திரிகடிபிரமாணம் எரண்டத்தெண்ணெயிலாவது ஆவிநெய்யிலாவது மத்தித்துக்கொள்ளத்தீரும்.

இளநீரில் எலுமிச்சம்பழச்சாறு பிழிந்துகொடுத்தாலும் எலுமிச்சம்பழச்சாற்றில் சர்க்கரைகலந்து சாப்பிட்டாலும்நெல்லிக்காய்ச்சாற்றில் சர்க்கரை சலந்துகொடுத்தாலும் வெந்தயமும் நெல்லிப்பருப்பும் வறுத்துபொடித்து திரிகடி புளித்தபழந்தயிரிலாவது நல்லெண்ணெயிலாவது கொடுத்தாலும் நெல்லிபருப்பை எலுமிச்சம்பழச்சாற்றிலரைத்துச் சர்க்கரைகூட்டிக் கொடுத்தாலுந்தீரும்.

வில்வப்பிஞ்சு திப்பிலி சாதிச்காய்ஓமம் சுக்கு இவைகளை ஓர்நிறையாய் வறுத்துப்பொடித்துச் சில்லுக்கருப்புக் கட்டியும் வெண்ணெயுங்கூட்டி மெழுகுபோலரைத்து ஒருகொட்டைப்பாக்குப் பிரமாணங் கொள்ளத்தீரும்.

மாதுளங்காயை வட்டமாகநறுக்கி விதையெடுத்துபோட்டுஅதற்குள் வெந்தயம்ஓமம் சீரகம் வகைக்கொரு விராகனிடை வைத்து முடித்துசூரணித்த சாணிக்குட்போதித்துசாணிவெந்தபின் எடுத்து கவசம்நீக்கி ஒருவிராகனிடை சீந்திற்சர்க்கரை கூட்டி அரைத்துத் தயிரிற்கலக்கிக் கொடுக்கத்தீரும்

திரிகடுகு சாதிக்காய் சாதிபத்திரி அதிவிடயம்அபின் களிப்பாக்கு மாம்பருப்பு முள்ளி இலவம்பிசின் மேற்றோல் நெல்லிவற்றல் காட்டாத்திபூ கருவேப்பிலை மாதுளம்பூ விளாம்பிசின் காசுக்கட்டி புளியவிரையின் மேற்றோல் தான்றிக்காய் வகைக்கு விராகனிடை-க நற்சீரகம்விராகனிடை-கக இவைகளை வெதுப்பிசூரணித்து திரிகடியளவு தேனிலாவது தயிரிலாவது கொள்ளநீங்கும.

கற்கடகச்சிங்கி விராகனிடை-ரு சுருள்ளிவிராகனிடை-க நற்சீரகம் விராகனிடை-உ இவைகளைவெதுப்பி யரைத்து எருமைத்தயிரிற் கலக்கிக்கொடுக்க நீங்கும்.

அத்தம் மரப்பூலா முத்தகாசுக்கு ஓமம்அதிவிடயம் பொன்முசுட்டைவேர் நற்சீரகம குங்கிலியம் இவைகளை ஓர்நிறையா யரைத்து ஆவிநெய்யில் வேகவைத்துண்ண நீங்கும்.

ஒருகழஞ்சு மிளகை ஆவின்மோரில் மூன்றுநாள் ஊறவைத்தெடுத்து அதனுடன் கீழ்க்காய்நெல்லி வரப்பூலாக் கொழுந்து வகைக்கொருபாக்களவு அரைத்து ஷை மோரிற் கலக்கிகொடுக்கநீங்கும்.

அத்திவேரை ஒருஎலுமிச்சங்காய்ப்பிரமாணம் அரைத்து எருமைத்தயிர்கலந்து கொடுக்கநீங்கும் ஒருஎலுமிச்சம்பழத்தைஎருமைத்தயிரிற் கலந்துகொடுக்க நீங்கும்.

வெள்ளைக்குங்கிலியம் விராகனிடை-க பொடித்துமோரிற்போட்டு மத்தாற்கடைந்து வடிகட்டி அரைவீசம்படி தேங்காய்ப்பாலிற் கலந்து கொடுக்கநீங்கும்.

வெள்ளைக்குங்கிலியம் மாதுளம்பூ ஓமம் சாதிக்காய் நெல்லிமுள்ளி திரிக்டுகு வகைக்குவிராகனிடை-க வெதுப்பிப் பொடித்து திரிகடித்தூளில் சர்க்கரைகலந்து எருமைதயிரிற் கொடுக்கநீங்கும்.

வெண்கிழுவை அந்திநாவல் இவைகளின்பட்டையை சமமாய் இடித்துபிட்டவித்துப் பிழிந்தசாறுபடி அரைக்காலில் ஒருகொட்டைப்பாக்குப்பிரமாணம் வெண்ணெயிற்கலந்து கொடுக்கநீங்கும்.

சாதிக்காய் காசுக்கட்டி வசுவாசிஓமம் இலவம்பிசின் லவங்கம் அதிவிடயம் குங்கிலியம் வகைக்குகழஞ்சு-க அபின்கழஞ்சு-௨ பரித்தியிலைச்சாற்றாலரைத்து தேற்றாவிரைப் பிரமாணமும் பரித்திக்காய் இலந்தம்பழம் இவைகளரைத்து வகைக்கு ஒருகொட்டைப்பாக்குப் பிரமாணம் வெண்ணெயிற் குழைத்துக்கொடுக்கவும்.

வெந்தயம்பெருங்காயம் வெள்ளைபூண்டுவகைக்கு விராகனிடை க-முருங்கையீர்க்குவிராகனிடை-௨சிவக்கவறுத்துஒருபடி தண்ணீர் விட்டு ஒருசிரங்கையாய்வற்றவைத்துகொடுக்க வாயுகழிச்சல் தீரும்.

காசுக்கட்டிவசம்பு வெள்ளுள்ளி பெருமரத்துப்பட்டை இவைகளரைத்து நல்லெண்ணெயிற் பொரித்துக்கொடுக்கநீங்கும்.

சாதிக்காய் அபின் நீர்ப்பூலாவேர்ப்பட்டை வகைக்கு விராகனிடை-க பொடித்து கோழிமுட்டைக்கருவிற் கலந்து பொரித்து ஆறுபோது கொடுக்கநீங்கும்.

ஓமம்படி அரைக்கால் நற்சீரகம்படி மாகாணி சுக்குமஞ்சள் அபின்சாதிக்காய் வகைக்குவிராகனிடை-க கஞ்சாவிராகனிடை-௨வறுத்துபொடித்து திரிகடிபிரமாணம் இளவெந்நீரிற் கொடுக்கநீங்கும்.

வெட்பூலா மருதிவிடத்தலை நீர்ப்பூலா இவைகளின்வேர்ப் பட்டை அதிவிடயம் நெல்லிமுள்ளி கூவிளம்பிஞ்சு இவைகளை ஒர்நிறையாயுலாத்திப் பொடித்து ஆவின்தயிரில் திரிகடிப்பிரமாணம் கொடுக்கநீங்கும்.

செந்தகம்விராகனிடை-க நாலுகடுக்காயை விரைநீக்கிப்பொடித்துக் கோழிமுட்டை வெள்ளைக்கருவிற்போட்டுப் பொரித்துக்கொடுக்கத்தீரும்.

எலுமிச்சங்காய்பிரமாணம் நாவற்கொழுந்தயறைத்து எருமைதயிரிற்கலக்கி ௩-நாள்கொடுக்கத்தீரும் வெள்ளாட்டுப்பாலில் எலுமிச்சம்பழம் சாறுபிழிந்து மூன்றுநாளுதயத்திற் கொடுக்கத்தீரும்.

கோழிமுட்டை வெள்ளக்கருவில் கடுக்காய்பூவை பொடித்துப் போட்டு நல்லெண்ணெவிட்டுப் பொரித்துக் கொடுக்கததீரும்.

அரைப்படிகருங்குருவைமாவில் விடத்தலைபிலை விளாங்காய் பிரமாணம் அரைத்து விரவிப்பிட்டவித்து ௩-நாள் தின்னநீங்கும்.

முற்றினதேங்காய்பூவில் சீனிகூட்டியுண்ணத்தீரும்.

அனிச்சைதுத்திஇலை தாங்கிவரப்பூலா இவைகளின்வேர் மூத்தக்

காசு அதிவிடயம்சீரகம் வெள்ளைகுங்கிலியம் ஓமம்இந்துப்பு வகைக்குக்கழஞ்சு-க இவைகளை ஆவின்பாலில் வேகவைத்துகொள்ளதீரும்

அரைக்காற்படி எருமைமோரில் ஒருநாளுமிச்சங்காய்ப் பிரமாணம் இலவங்கப்பட்டையை அரைத்துக்கலக்கிக் கொடுக்கநீங்கும்

ஆழாக்கு எருமைப்பாலிற் கலந்தவுடனே ஒருதுளிபுளியிலைச்சாறுபிழிந்து கொடுக்கவும் இந்தப்படி சு-நாள் கொடுக்கத்தீரும்.

நாவிரூதம் கொந்தகம்சித்திரமூலம் சாதிக்காய்அதிவிடயம்தான்றிக்காய் கிராம்பு பெருமரத்துப்பட்டை மூத்தக்காசு பொரித்து வெங்காரம் காய்ம்பற்பாடகம் இலவம்பிசின்சுக்கு நெல்லிவற்றல் சாதிப்பத்திரி அபின் திப்பிலிகஞ்சா இவைசமன்கூட்டிக் கஞ்சாசாற்றாலாட்டிக் குன்றிப்பிரமாணம் உண்டைசெய்து தயிரிலிட வயிற்றுக்கடுப்பு மூலமுளைக்குன்மம் கைகால்ஊறலுக்கு நாகபஸ்பம்.

ஒருபலம் நாகத்தைக்குகையில் வைத்துருக்கி அதில் கீழ்க்காய் நெல்லிசமூலத்தை உரைத்துபொடித்த தூள்பலம்-க தூவிவறுக்கப் பற்பமாகும் அந்தபற்பத்திலிடை சூதமசேர்த்து பனைமட்டைச் சாற்றாலாட்டி பில்லைதட்டிக் காயவைத்து குக்குடப்போடக் கொடிய சுண்ணமாகும் அதைவெண்ணெயிலும் விபாதிக்குத்தக்க மற்ற அனுபானங்களிலுங் கொடுக்க ஷை வியாதிகள்தீரும்.

வயிற்றுக்கடுப்புக் கழிச்சலுக்கு.

ஓமம் மிளகு வகைக்குப்பலம்-க ஓர்நிறைபாய்வெதுப்பிப் பொடித்து வெல்லம்-க கூட்டியரைத்து திரிகடிப்பிரமாணம் ய-நான்கொடுக்கத்தீரும்.

வயிற்றுக்கடுப்பு வாயுவுக்கு.

சுக்கு திப்பிலி மிளகு ஓமம்உப்பு கருவேப்பிலை பெருங்காயம் சுண்டைவற்றல் இவைகளை ஓர்நிறையாய் வெதுப்பிப்பொடித்து சுடுசோற்றில் திரிகடிப்பிரமாணந் தூவி நெய்வார்த்துண்ணத்தீரும்.

ஆசனக்கடுப்புக்குப் புகை.

ஆமைமோட்டைப் பொடித்து தணலிற்றூவி அபானவாயிற் புகைபிடிக்க கடுப்பு உடனேதீரும்.

இரண்டுவிராகனிடை சுக்கை மோர்விட்டு மைபோலரைத்து அரிசிலையும்வைத்து தைத்து மோரில் எ-தபா வேகவைத்து வடிகட்டித்தயிரிற் குழைத்துண்ணத்தீரும்.

சுரத்தின்பேரிற்காணும் கடுப்புக்கு.

செற்பொரிமா ஆவின்வெண்ணெ கற்கண்டு நற்சீரகத்தூள் இவைகள் ஓர்நிறைபாய் ஒன்றாய்பிசைந்து விளாங்காய்ப் பிரமாணம் கூ-நாள் சாப்பிடத்தீரும்.

சகலகிராணி அதிசாரம் வயிற்றிரைச்சல் கழிச்சல் சீதம் இரத்தம்விழுதல் மூலக்கடுப்பு வயிற்றுக்கடுப்புக்கு.

சுண்டைவற்றல் கருவேப்பிலை மாம்பருப்புஓமம் மாதுளம்பழத்தோடு நெல்முள்ளி வெந்தயம் இவைகளைச்சமமாய் வெதுப்பிப் பொடித்த திரிகடிப்பிரமாணம் தயிரிற்கொள்ள நீங்கும்.

செவியம் முத்தக்காசு-சுக்கு திப்பிலிதிப்பிலிமூலம் மல்லியாய்
விளங்கம் சீரகம கருஞ்சீரகம் ஓமம் அரத்தை பேரரத்தைமிளகுவெ
ந்தயம் குரோசாணிஓமம் தக்கோலம்லவங்கப்பட்டை சன்னலவங்கப்
பட்டை இலவங்கப்பத்திரி சிறுநாகப்பூ கிராம்பு ஏலம் சாதிக்காய்
சாதிபத்திரி வகைக்குவிராகனிடை-க தூதுளைகண்டங்கத்திரிசிறுவ
ழுதலை சித்திரமூலம் சசாமூலிமுக்காவேளை சிறுகாஞ்சோரி நன்னாரி
சிற்றாமுட்டி வட்டத்திருப்பி சிறுகுறிஞ்சா விலாமிச்சண்ணம் வில்
வம்மாதுளம் இவைகளின்வேர் வில்வப்பிஞ்சு மாதுளம்பிஞ்சு கரு
வேட்பிரக்கு நெற்பொறி வகைக்குப்பலம்-வ இவைபெல்லாமிடித்து
ச-படி தண்ணீரிற்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வேளையொன்
றுக்கு அரைக்காற்படிவீதம் கொள்ள நீங்கும்.

வெந்தயம் வால்மிளகு கருஞ்சீரகம் அதில்சாதிப்பத்திரி ஓமம்
சாதிக்காய்கிராம்பு லவங்கப்பத்திரி திரிகடுகுதிரிபலை மாதுளம்பழ
த்தோல் அதிமதுரம் குரோசாணிஓமம் அதிவிடையம் சிறுநாகப்பூ
வாய்விளங்கம்கோஷ்டம சடாமாஞ்சில் கடுக்காய்பிஞ்சு சீரகமல்லி
தாளிசபத்திரி முத்தக்காசு சன்னலவங்கப்பட்டை சாட்டாத்திப்பூ
கற்கடகச்சிங்கி கசகசா ஏழுவிரைபுடம்போட்டகஞ்சாபெருமரத்து
ப்பட்டை கூவிளத்தின்பழம் அபின்புளியவிரைத்தோல் மாங்கொட்
டைப்பருப்பு வகைக்குப்பலம்-வ பெருங்காயம் விராகனிடை-க இ
வைகள் இளவறுப்புச்செய்து கலுவத்திட்டு ஆல்அரசு நாவல் அத்தி
நீர்ப்பூலா ஒதி ஆவாரைவிடத்தநெல்லி இலந்தை இவைகளின்சாறு
வகைக்குப்பலம்-உ இடித்து எட்டுப்படி தண்ணீரிற்போட்டு எட்
டொன்றாய் வற்றவைத்து வடித்துக் குழம்பாய்க்காய்ச்சி அதனுள்
மைபோலரட்டி நாவல் ஏழுதொன்னையால் மூடித்தைத்து மறைவில்
வைத்து மூடித்தீயெரித்து இலைஅவிந்தபருவத்தில் மருந்தையெடுத்து
அரைத்து சுண்டைக்காய்பிரமாணம் உண்டைசெய்துகொண்டு அந்
தந்தவியாதிக்குத்தகுந்தபடி பொன்னாங்காணிசாறுகிராம்புஆவாரம்
பட்டைவாழம் கோரைக்கிழங்குசாறு எருமைத்தயிர்மோர் தேன்
பச்சரிசிகழுநீர் இவைகளிலொன்றில் ஒருண்டை கொடுக்கதீரும்.

பெருமரத்துப்பட்டை கொழுந்து மருதப்பட்டை உசிலம்பட்
டைவகைக்கொருதேங்காய்பிரமாணம் சிதைத்துவெண்சோளம்கல
ந்த கழுநீரிற்போட்டுப்பிசைந்துவேளையொன்றிற்குஅரைக்காற்படி
வீதங்கொடுத்து கோழிமிளகுநீரும் அன்னமுங்கொள்ள தீரும்.

மாதுளம்பிஞ்சு வில்வப்பிஞ்சு விளாம்பிஞ்சுமாம்பருப்பு இலவ
ம்பிசின் நெருஞ்சிக்காய் அத்திப்பிஞ்சு பெருமாத்துப்பட்டை புளி
யவிரைத்தோல் பொன்முசட்டைவேர் நாவற்பட்டை நாய்க்கடுகு
சாதிக்காய் சாதிபத்திரி குரோசாணிஓமம் பெருங்காயம் இவைகள்
வெய்யலிலுலர்த்தித் தூள்செய்து எருமைமோரில் திரிகடிவீதங்கொ
ண்டுவரத்தீரும்.

அகத்திஅரசுஅத்திஆவாரை இவைகளின்பிஞ்சு மாதுளம்வேர்
கோவைத்தண்டு சுரைத்தண்டுதான்றி நெல்லிக்கடுக்காய் சாதிக்காய்

சிராம்புவ ந்திரி ஓமம்வெந்தயம் திரிகடுகுஏலம் லவங்கம்சடாமாஞ்சில் குருசாணிஓமம் அதிமதுரம்வாய்விளங்கம் சீரகம்மல்லி நருக்குமூலம் வகைக்குகழஞ்சு-க இவைகள் சிதைத்து மூன்றுபடி தண்ணீரிற்போட்டுக் காற்படியாய் வற்றவைத்து வடிகட்டிஅதில்கொட்டைப்பாக்கு பிரமாணம் ஆவின்வெண்ணெய்போட்டு உருக்கினபின் கொடுக்கவும இந்தப்படி ௯-நாள் கொள்ளத்தீரும்.

சர்திக்காய்சாதிப்பத்திரி மாசிக்காய்கிராம்பு கோஷ்டம்அதிமதுரம் அதிவிடயம் லவங்கப்பட்டை இலவம்பிசின் விளாம்பிசின் இவைகள் ஓர்நிறைப்பாயரைத்து மாதளங்காய்க்குள்வைத்து வெள்ளைதுணிசுற்றி அதின்மேற்சாணம் அப்பிக்கட்டெருவிற் புடம்போட்டு சாணியை வெந்தபருவத்திலெடுத்துக் கவசநீக்கி கஞ்சாசாற்றாலாட்டிச் சிறுசுண்டக்காய்ப்போலுண்டைசெய்து வடகலிற் கொடுத்தால் கடுப்புசீதம் இரத்தம்மூலம்நீங்கும் தேனிலிட அதிசாரம்நீங்கும் புளிகூட்டி மிளகாய்தள்ளவும்.

சாதிக்காய் சாதிபத்திரி பெருங்காயம்சீரகம் அதிவிடயங் கிராம்பு அபின் கஞ்சாவெந்தயம் கழற்சிவித்து குருசாணி இவைகள் ஓர்நிறைபாய் கஞ்சாயிலைச்சாற்றால் ௪-சாமம் அரைத்து இலந்தைவிதைபிரமாணம் உண்டைசெய்து தயிரில்மூன்றுநாள் கொடுக்கத்தீரும்.

கிராம்புதிரிகடுகு ஓமம்சிற்றரத்தைபொன்னுவரைவேர் அன்னபேதி சமுத்திராபழம் சாதிக்காய்பெருங்காயம் வகைக்கு விராகனிடை-க வெள்ளுள்ளி தோல்நீக்கிபலம்ஒண்ணறை வெற்றிலைக்காம்பு விராகனிடை-உ இவையெல்லாம்வறுத்து மைபோலரைத்து வெற்றிலையில்வைத்துக்கட்டி ஒருசட்டியில்வைத்து தீயெரித்து வெற்றிலை கருகிவருகிறசமயத்தில் எடுத்துஅரைத்து மறுபடியும்வெற்றிலையில் வைத்துச்சுருட்டி முன்போல்வெதுப்பியெடுக்கவும் இந்தபடி எ - விசைவேகவைத்து அரைத்துஉண்டைசெய்துவெந்நீரிற்கொள்ளதீரும்

திரிகடுகுஓமம்சாதிக்காய்சாதிபத்திரி அதிவிடயம்கிராம்புஅக்கிராகாரம் வகைக்குவிராகனிடை-க அபின்விராகனிடை-௬ எலுமிச்சம்பழச்சாற்றாலரைத்தச் சுண்டக்காய்பிரமாணம் உண்டைசெய்து எருமைத்தயிரிலிடத் தீரும்.

சாதிக்காய் சாதிபத்திரி கிராம்பு அதிவிடயம் குருசாணிஓமம் விளாம்பிசின் மாதளம்பிஞ்சு இலவம்பிசின் வகைக்குக் கழஞ்சு-க இவைகண்டயிடைக்கு அபின்கூட்டி கஞ்சாயிலைச்சாற்றில் ஒருசாமமும் ஊமத்திலைச்சாற்றி லொருசாமமும் ஆட்டிப் பரிக்கிவிரைப்பிரமாணம் உண்டைசெய்து நிழலிலுலர்த்தி எருமைத்தயிரில்நாழியொன்றிற்கு ஒருண்டையாக ௫-நாள் கொடுக்கத்திரும்.

சீரகம் சாதிக்காய்சாதிபத்திரிகிராம்பு அதிவிடயம் குருசாணிஓமம் சாதிலிங்கம் ஊமத்தம்விரை விளாம்பிசின் மாதளம்பிஞ்சு

வகைக்கு விராகனிடை-ஈ இவைகண்ட இடைக்கு அபின்கூட்டிக் கஞ்சாயிலைச்சாற்றிலும் ஊமத்தஞ் இலைசாற்றிலும் வகைக்கொரு சாமமாட்டி பரித்திவிரைப் பிரமாணம் உண்டை செய்துக்கொண்டு தேனிற்கொள்ள கிராணிக்குள்நீங்கும் எருமைத்தயிரிலிட வயிற்று கடுப்பு நீங்கும்.

சாதிக்காய் சாதிபத்திரி கிராம்பு லவங்கப்பத்திரி ஆனைத்திப்பிலி ஓமம் அதிவிடயம் கோஷ்டம் கசகசாசீரகம் கருஞ்சீரகம் வால்மிளகு குருசாணிஓமம் திரிகடுகு திரிபலை அதிமதுரம் வெந்தயம் மலடு கடுக்காய்மொக்கு அபின் சுத்திசெய்தகஞ்சா அதில் காட்டாத்திமொக்கு தாமரைக்கிழங்கு விளாவரிசி நீர்முள்ளிவித்து சார்தோலரிசி முத்தக்காசு தென்னமொக்கு மாதுளைவித்து பூலாவேர்ப்பட்டை கருவேல்வித்து பெருமரத்தின் வேர்ப்பட்டை காட்டுக்கரணை புளியவிரைத்தோல் மாங்கொட்டைபருப்பு வகைக்குப் பலம்-௨ இவைகள் நிழலிலுலர்த்திச் சூரணஞ்செய்து ஆல் அரச நாவல் அத்தி முள்ளிலவு ஒதியம்பட்டை முடக்கொத்தான் வெட்பாலா இவைகளின்வேர் ஓர்நிறையாயிடித்து அரைப்படிசலத்திற் போட்டு ஒருபடியாய் வற்றவைத்திருத்து அதில்ஆவின்பால்படி-உ வெல்லம்பலம்-ய கூடச்சேர்த்து பாகுசெய்து மேற்படி சூரணத்தை தூவிக்கிண்டி ஆவின்நெய்ப்படி-க விட்டு லேகியஞ்செய்து இறக்கி தேன்படி-வ கெந்தகச்செந்தூரம் லோகசெந்தூரம் வகைக்குப் பலம்-க போட்டுக் கிண்டி வைத்துக்கொண்டு கழற்சிக்காயளவு அந்திசந்தி ஒருமண்டலங் கொள்ளத்தீரும்.

மாதுளம்பழத்தோல் வில்வப்பிஞ்சு காட்டாத்திமொக்குகடுகு பொன்முசுட்டைவேர் முத்தக்காசு புளிய விரைத்தோல் லவங்கம் இலவம்பிசின் ஓமம் குருசாணிஓமம் திரிகடுகு வெட்பாலையரிசி ஆனைதிப்பிலி நாவற்பட்டை பெருமரத்துப்பட்டை மாம்பருப்பு கழற்பருப்பு கருங்காலிவயிரம் வெள்ளிலோத்திரம் நீர்முள்ளிவிரை அதிவிடயம் கருஞ்சீரகம்நற்சீரகம் காசுக்கட்டி இவைகளை ஓர்நிறையாய்ப்பொடித்து நெல்லிக்காய்ச் சாற்றாலாட்டிக் கழற்காய்ப் பிரமாணம் உருண்டை செய்துக்கொண்டு தயிரிற்கொள்ளத்தீரும் இவைகளெல்லாம் இச்சாபத்தியம்.

கிராணிரோகப்படலம்-முற்றிற்று.

———

# வாயுரோகப் படலம்.

அதாவது நரம்புவழியாய் வாதநீர் அதிகரித்து அபானத்தில் விரைகளில் நரம்புவழியாயும் இன்னம்பலபலவழியாயும் மாதுநீர்களால் சகலவியாதிகளையும் அதிகரித்தால் அதமேக சம்பந்தத்தில் சேர்ந்தவியாதி என்னப்படும் இது வாயுரோகப்படலமென பெயர் வகுக்கப்பட்டது.

## விருத்தம்.

உரைத்தோம்வாயுவென்பதற்கு மூணந்தவாதந்தானறிந்து
நிரைத்தசூட்சவிகமனைத்தும் நேரும்பலநூல்களையாராய்ந்து
குரைத்தமொழியுந்தான்பகுத்துக் கூறப்பிணியுந்தானகல
திரைத்தமுனிவர்தன்னருளால் தெரியவுரைத்ததுவாமே.

## அண்டவாயுக்குணம்.

வாயு குடலிற்றங்கி நரம்புவழியாய் விரையிலொன்றி யிறங்கி மொருமிவலிக்கும் அது மேல்நோக்கி உடலுள் வாங்கும் அதன் நரம்பு புடைத்துக்காணும்.

## நிவர்த்தி.

நொச்சி கழற்கொடிசாரணை ஆடாதோடைவேளை வேலிப்பருத்தி கோழியவரை இவைகளின்கொழுந்து எருக்கமொக்கு வகைக்குப்படி-௧ வசம்பு சித்திரமூலம் மிளகுதிப்பிலி ஓமம்வகைக்குவிராகனிடை-௩ வெள்ளுள்ளி கழற்சிபருப்பு விராகனிடை-௫ பெருங்காயம் விராகனிடை-௧ இவைகள் வேலிப்பருத்திச் சாற்றிலரைத்து-௧ கழஞ்சுவிதம் உண்டைசெய்து நிழலுலர்த்திக் கொண்டு சங்கங்குப்பி நொச்சி உத்தாமணி முருங்கை சாரணை கொடுவேலி வகைக்குப்பலமரைவிதம் ஒன்றாய்ச்சிதைத்துக் கியாழஞ்செய்து அதில் ஒருண்டையை ௩-அரைத்துக் கொடுக்கவும் இப்படி மூன்றுநாள் புளிதள்ளி சாப்பிடத்தீரும்.

கொடுவேலி சங்கங்குப்பி செங்கத்தாரி காத்தொட்டி இவைகளின்வேர்ப்பட்டை வகைக்குப்பலம்-௪ கருப்புக்கட்டிபலம்-௭ எள்ளுப்பொடி பலம்-௨ மிளகுஓமம் வகைக்குப்பலம்-௧ வெள்ளைப்பூண்டுபலம்-௨ சீரகம் இந்துப்பு வெடியுப்பு நவாச்சாரம் அதிவிடயம் வகைக்கு விராகனிடை-௨ தேங்காய்-௧ இவைகளை மெழுகுபோலிடித்து கொட்டைபாக்குப்பிரமாணம் இருபோது ௨௰-நாள் உட்கொள்ள புளைபில்தள்ளவும்.

குறுணிக் கழுதைப் புட்டையை நாலுமாக்கால் தண்ணீரிற் கரைத்து வேடுகட்டி அதின்மேல் எருக்கங்காயில் பஞ்சுவிரை நீக்கி நாட்பட்ட வரகரிசிமாவை வைத்துமூடி நூலாற்கட்டி பிட்டவித்து காய் வெந்தபதத்திலெடுத்து நாழிகை-க கடுகு ஒருகாய்பிட்டை சாப்பிடத்தீரும்பத்தியம் கைப்புபுளிப்பு தள்ளவும்.

சத்திசாரணைவேர் முடக்கொத்தான் கொழுந்து கழற்கொழுந்து உள்ளிபெருங்காயம் சுக்கு இவைகள் ஓர்நிறையாய் அரைத்து ஒருஎலுமிச்சங்காய்ப் பிரமாணம் கொடுக்கத்தீரும்.

வெள்ளுள்ளிசுக்கு நாவற்பட்டை வகைக்குப்பலம்-க இடித்து நாழிநீரிற்போட்டு சரியாகவற்றவைத்து அதில் மூன்றுகழற்பருப்பைப் பொடித்துப்போட்டு மூன்றுநாள் கொடுத்து முருங்கையிலையை அதில்வதக்கிக்கட்ட விரையேறிஇறங்குகிறது தீரும் இச்சாபத்தியம்.

ஒருதேங்காய்ப்பூவின் மத்தியில் தோல்நீக்கின ஒருபலம் வெள்ளைப்பூண்டைவைத்து பிட்டவித்து பூவைப்பால்பிழிந்து பூண்டையும் ஒருபலம் முருங்கப்பட்டையையும் நன்றாயரைத்துச் சாறுபிழிந்து ஒன்றாய்க்கலந்து சாப்பிட்டுக் காற்றுபடாத அறையிற்படுத்துக் கொள்ளவும் இப்படி ந-நாள் செய்யத்தீரும்.

கழற்சிப்பருப்பு வெள்ளுள்ளி முருங்கப்பட்டை சுக்கு கருஞ்சாணம் வகைக்குக்கழஞ்சு-ச ஒருபடிசலத்திற்போட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்துக் கொடுக்கவும் இந்தப்படி சு-போது கொடுக்கத்தீரும்.

புரசவிரை மிளகுவகைக்கு விராகனிடை-ந வெள்ளைப்பூண்டு விராகனிடை-ந அரைத்து கொட்டைப்பாக்குபபிரமாணம் மூன்றுநாள் உதயத்திற்கொடுக்கத்தீரும் புளிபுகையிலை தள்ளவும்.

கழற்பருப்பு சித்திரமூலம் மாவிலிங்கு இவைகளின் வேர்ப்பட்டை வகைக்குவிராகனிடை-ய் அண்டவெல்லக்கருவில் விரவிப்பொரித்துண்ணத்தீரும்.

கோழிமுட்டை வெளுமைக்கருவில் ஒருகழற்பருப்பு கொட்டைபாக்குப்பிரமாணப் சிற்றுமுட்டிக் கொழுந்தும் அரைத்துபோட்டுப் பொரித்துக் கொடுக்கததீரும்.

கருவளையல் மிளகு பெருங்காயம் இவைகள் ஒர்நிறையாய் மைபோற்பொடித்து திரிகடிப்பிரமாணங் கொள்ளத்தீரும்

திருகுகள்ளியைவாட்டிச் சாறுபிழிந்து அதற்குநிகர் நல்லெண்ணைகூட்டி ஆள்பலத்துக்குத்தக்கபடி மூன்றுநாள்கொடுத்து ஆறுநாள் பத்தியம் வைக்கத்தீரும்.

கழற்சிப்பருப்பு சத்திசாரணைக்கிழங்கு மிளகுஇந்துப்புபெருங்காயம் வெள்ளுள்ளி வசம்பு இவைகள் ஓர்நிறையாய் வெள்ளாட்டுபாலிலரைத்துக் கொடுக்கநீங்கும்.

புளியிலையைப்பிடித்து ரு-படி சலத்திற்போட்டு அதில் திரிகடுகு இந்துப்புஓமம் காந்தம்வெங்காரம்வெள்ளுள்ளி வகைக்கு விராகனிடை-க வாளம் விராகனிடை-ய கழற்சிப்பருப்பு விராகனிடை-ரு இவைகள்கிழிகட்டி வேகவைத்து மருந்துகள்கழுவி எருக்கம்பூச்சாற்றுலாட்டி தேற்றாவிரைப்பிரமாணம் உருண்டைசெய்து விளக்கெண்ணெயில் ஒருகுளிகையை உரைத்து மூன்றுநாள் பத்தியமாய் கொடுக்கநீங்கும்.

பெருங்காயம் கழற்பருப்பு மிளகு இவைகள் ஊமத்திலைச்சாற்றுலரைத்து பரித்திவிரைப்பிரமாணம் உண்டைசெய்து இருபோது மூன்றுநாள் ஒருகாசிடை ஆமத்திலைச்சாற்றிலரைத்துக் கொடுத்து மேற்படிசாற்றை விரையிற்பூசி தடவிவறுத்து ஒத்தணஞ் செய்யத்தீரும்.

இதுப்பைப்பிண்ணாக்கும் சிவந்தகோழிக் காந்தமும் இரண்டு சுண்டைக்காய்பிரமாணம் அரைத்துக் கருப்புக்கட்டியில்பொடித்து கொடுக்கநீங்கும்.

குட்டித்தக்காளியிலையும் தைவேளையிலையும் வதக்கி ஒத்தணஞ் செய்து கட்டவும்.

கழுதைலத்தியும் கழற்சியிலையும் வறுத்து ஒத்தணஞ் செய்துக் கட்டவும்.

ஆனை குதிரை ஒட்டை கழுதை வெள்ளாடு இவைகளின் லத்தியும் தேட்கொடுக்குயிலையும் தேங்காய் திருகினபூவும் பூவாரம்பூவும் கொடிக்கள்ளிபட்டையும் ஓர்நிறையாயிடித்து வறுத்து ஒத்தணங் கொடுக்கவும்.

மந்தாக்கினிவாய்குணம்.

பசியிசவுண்டாசி மந்திக்கும் சிந்தையில்நினைந்ததெல்லாந் தின்னவிரும்பும் கொள்ளஒட்டாது வயிற்றிற்றங்காமல் வாந்தியாகும் மலஞ்சருகும் கிறுகிறுக்கும் வயிறுவலிக்கும் மலத்தில்சிறு இரத்தமும் மிகுந்தசலமும்விழும பலங்குறையும நயனமுகம் வெளுக்கும.

நிவர்த்தி.

மேற்சொல்லிக்கின எட்டுபலம் இஞ்சியை சிறுபில்லையாக நறுக்கி அதில்-கரு எலுமிச்சம்பழம்பிழிந்து சூரியனில் வைத்துலர்த்தி சரிநெய்விட்டுவறுத்து கடைசீர்பலம்-க சீரகம்பலம்-உ சதுர்ச்சாதம் திரிசாதம்திரிகடுகு தாளிசப்பத்திரி குருசாணிஓமம் வாய்விளங்கம் வகைக்குக்கழஞ்சு-ரு இவைகளைபிடித்துச் சூரணஞ்செய்து சீனியயும்-ரு கூட்டி திரிகடிப்பிரமாணங் கொள்ளத்தீரும்.

மேற்சொல்லிக்கி அரிந்த இஞ்சிபலம்-ய உமிபோக்கின சீரகம் பலம்இரண்டரை இவைகளை எலுமிச்சம்பழச்சாற்றில் மூன்றுநாள் ஊறவைத்துலர்த்தி ஆவிநெய்தெளித்துச் சூரணஞ்செய்துக் கொண்டு திப்பிலிமிளகுகோஷ்டம்கிராம்புதாளிசப்பத்திரி திப்பிலி வாய்விளங்கம் சடாமாஞ்சில் அதிமதுரம் கொத்தமல்லி ஓமம் திப்பிலி

மூலமும் நாளோவேர்சந்தனம் ஏலம்தழுதாழை வேர்த்தோல் இவை கள் ஓர்நிறையாகக் கரிச்சாலைச்சாற்றில் மூன்றுநாளூறவைத்துஉலர்த்தி இடித்துச் சூரணஞ்செய்துக்கொண்டு இரவகைச் சூரணத்தை யும் ஒன்றுபக்கலந்து அதிலநெற்பொறி முந்திரிப்பழம் சலாசத்து பற்பம் வகைக்குப்பலம்-க சீனிபலம்-ய கூட்டித் திரிகடிபிரமாணம் சாப்பிட்டுவரத்தீரும்.

கருஞ்சீரகம் நற்சீரகம் இந்துப்பு திரிகடுகு கருவேப்பிர்க்கு வகைக்குப்பலம்-க இவைகட்கு எட்டிலொன்று காச்சிவெதுப்பிசூரணித்து திரிகடிப்பிரமாணம் அன்னத்திற்றாயி நெய்விட்டு பிசைந்து சாப்பிடத்தீரும் மலசுத்தியாகும்.

அக்கினிமந்தம் வாய்பொருமலுக்கு.

கண்டங்கத்திரி முள்ளி சத்திச்சாரணை ஓமம் கொடுவேலி திரிகடுகு நவாச்சாரம திரிபலை பஞ்சலவணம் சத்திச்சாரம் சீரகம் கருஞ்சீரகம் வகைக்குப்பலம்-வ வீதம்பொடித்து அதற்குநிகர் அசுவகெந்திச்சூரணங் கூட்டித்தேனிலாவது இஞ்சிச்சாற்றிலாவது கொள்ளத்தீரும்.

இந்துப்பு விராகனிடை-க சீரகம்விராகனிடை-உ சாமம் ஓமம் விராகனிடை-ஈ சுக்குவிராகனிடை-ஈ திப்பிலிவிராகனிடை-ரு மிளகுவிராகனிடை-சா பொடித்து அதற்கு கடுக்காய்ப்பொடிகூட்டி திரிகடி வெந்நீரிற் கொள்ளத்தீரும்.

ஓமம்சுக்கு கொடிவேலிவேர் இவைகள் ஓர்நிறையாய்ப் பொடித்து அதற்குநிகர் கடுக்காய்ப்பொடி கூட்டித் திரிகடிப் பிரமாணம் மோரிற் கொள்ளத்தீரும்

பச்சைகருவேப்பிலையை ஒருதேங்காய்ப்பிரமாணம் அரைத்து ஒன்றரைப்படி தண்ணீர்கலக்கி அரைபடியாய்வறறவைத்து வடிகட்டி அதில்கருப்புக்கட்டி பலம்-ஈ போட்டுப் பாகுசெய்து கரியுப்பு வெடியுப்பு இந்துப்பு சீனிக்காரம்வெள்ளுள்ளிகருஞ்சீரகம்ஓமம்திப்பிலி பெருங்காயம் சவுக்காரம நவாச்சாரம வகைக்குக்கழஞ்சு-ஈநெற்பொரிபடி அரிக்கால் இவைகள்தனிததனியே சூரணித்துத் தூவிக்கிண்டி வைத்துக்கொண்டு ஒருகொட்டைப்பாக்கு பிரமாணஞ் சாப்பிட்டுவரத்தீரும்.

தோல்நீக்கின இஞ்சிபலம்-கசு அரைப்படிநெய்தெளித்து பொன்னிறமாய் வறுத்துச் சூரணித்துக்கொண்டு கடுகுரோகணி தேசாவரம் சுக்குசீரகம் வகைக்குப்பலம்-க ஏலம்மிளகு வகைக்குப் பலம் முக்கால் லவங்கப்பட்டை லவங்கப்பத்திரி நெல்லிமுள்ளிவகைக்கு பலம்-ற சாதிக்காய் அதிமதுரம் சிறுநாகப்பூலவங்கம் தாளிசபபத திரி-கூ கூகைநீர்வகைக்கு கால் இடித்துச் சூரணஞ் செய்துகொண்டு இருவகைச்சூரணத்தையும் ஒன்றுபகலந்து சர்க்கரைபலம்-கசு கூட்டித் திரிகடிப்பிரமாணம் கொள்ளத்தீரும்,

வாயுத்திரட்சி அரோசியம் மலக்கட்டுக்கு.

ஆவின்பாலில் அவித்துச் சுத்திசெய்த சிவதைபலம்-சு திரிபலை சுக்கு திப்பிலிபூண்டு வகைக்குப்பலம்-க லவங்கப்பட்டை லவங்கப் பத்திரி சிறுநாகப்பூ ஏலம் இந்துப்புவகைக்குப்பலம்-௨ இவைகளை பிடித்துச் சூரணித்து அதற்குசிகா சர்க்கரைகூட்டி திரிகடிப் பிரமாணம் தேனிலாவது நெய்யிலாவது வெந்நீரிலாவது கொள்ளத்தீரும்

பித்தவாயு அரோசியம் அக்கினிமந்தம் வயிற்றெரிவுக்கு

ஆவாரைபஞ்சாங்கச் சூரணப்பொடி-க இஞ்சிஎலுமிச்சம்பழம் முசுமுசுக்கை இவைகளின்சாறு ஆவின்பால் வகைக்குப்படி-௨ சீனி பலம்-கூ ஒன்றாய்க்கலந்து பாகுசெய்து அதிமதுரம் சீரகம் வகைக்குப்பலம்-௨ ஏலம் மிச்சம்வேர் சிறுநாகப்பூ தாளிசபத்திரி வகைக்குப்பலம்-ய இவைகளையிடித்துச் சூரணஞ்செய்து தூவிகிண்டி ஆவின்நெய்படி-௨ தேன்படி-க கூடவிட்டு லேகியஞ்செய்துகொட்டை பாக்குப்பிரமாணஞ் சாப்பிட்டுவரத்தீரும் இச்சாபத்தியம்.

புளியேப்பத்திற்கு.

வசம்பு சுட்டசாம்பல் வறுத்தசரியுப்பு பெருங்காயம்இவைகள் ஓர்நிறையாய்ப் பொடித்து திரிகடிப்பிரமாணம் மோரிலாவது நீரிலாவது கொள்ளத்தீரும்

ஊஷ்ணவாயுவுக்கு.

பிரண்டைஓமம் கருவேப்பிலைக்குசரியுப்பு வகைக்குப்பலம்ஷவறுத்து மூன்றுபடி எருமைமோர்விட்டு ஒருகொதி வந்தபிறகு இறக்கி வைத்துக்கொண்டு சாப்பிட்டுவரநீங்கும்

அஜீரணவாயுவுக்கு.

சுக்குதிப்பிலிமிளகு அசமதாகம் இந்துப்புகற்சீரகம் பெருங்காயம் இவைகளோர் நிறையாய்ச்சூரணித்து திரிகடிப்பிரமாணம் அசனத்திற்பிசைந்து ஆவிநெய்விட்டு உண்ண நீங்கும்.

சந்திச்சாரணை கண்டங்கத்திரி வில்வம் இவைகளின்வேர்வகைக்குப்பலம்-கூ சுக்குபலம்-க பூண்டுபலம்-கூ காயம்பலம்-ய இந்துப்பு பலம்-கூ௨ இவைகள்சிதைத்து ஒருப்படி தண்ணீரிற்போட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்து ஆசனத்தின் பின்னுட் கொள்ளத்தீரும்.

மிளகை வறுத்துப் பொடித்து திரிகடிப் பிரமாணம தேனிற் கொள்ள நீங்கும்.

கருவேப்பிலைக்கு சுக்குசீரகம் ஓமம் வகைக்கு விராகனிடை-கூ ஒருபடி தண்ணீரிற்போட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்து உட்கொள்ள நீங்கும்.

மந்தவாயுவுக்கு.

சீரகம் ஏலம் பச்சைகர்ப்பூரம் இவைகள் ஓர்நிறையாய்சூரணித்து அதற்குசிகர் சர்க்கரைகூட்டி திரிகடி அந்திசந்தி கொள்ளநீங்கும்

மேற்றோல்சீவின இஞ்சிபலம்-௰ ஏலம் திரிகடுகு கிராம்பு ஓமம் வாலுளுவையரிசி சாதிக்காய் ஆனைத்திப்பிலி சீரகம் அதிமதுரம் குருசாணிஓமம் அமுக்கரா கசகசா லவங்கப்பத்திரி கொடிமல்லி முந்திரிப்பழம் பேரீச்சம்பழம் இவைகள் நெய்விட்டு வறுத்துச் சூரணித்துத் திரிகடிப்பிரமாணம் உட்கொள்ள நீங்கும்.

## பித்தவாயுவுக்கு.

லவங்கம் திரிகடுகு முத்தக்காசு சிறுநாகப்பூ திரிபலை இவைகளை ஓர்நிறையாய்ச் சூரணித்து அதற்கு நாலிலொன்று ஆவின்பாலிற் சுத்திசெய்த சிவதை சூரணங் கூட்டி வேளை யொன்றிற்குக் கழஞ்சு தேனிற்கொள்ள நீங்கும்.

நற்சீரகம் அதிமதுரம் கருஞ்சீரகம் சோம்பு சன்னலவங்கப்பட்டை சதகுப்பை வகைக்குப்பலம்-௩ மல்லிபலம்-௩ இவைகளை யிடித்துச் சூரணஞ்செய்து சர்க்கரை கற்கண்டு வகைக்குப்படி-௩ கூட்டி திரிகடிப்பிரமாணம் வெந்நீரிலிரண்டு நேரமும் ௰-நாள் கொள்ளநீங்கும்.

கடுக்காய் திப்பிலி சுக்கு சீரகம் ஓமம் இந்துப்பு நறுக்குமூலம் வகைக்குப்பலம்-௧ இவைகள்பொடித்து ஒருபலங்கருப்புக்கட்டியை பாகுசெய்து அதிற்றாவிக்கிண்டி நாழியொன்றிற்கு ஒருகழற்காய்ப் பிரமாணம் கொள்ள நீங்கும்.

## வாயுச்சூலைக்கு.

திரிகடுகு இந்துப்பு ஓமம் இவைகள்வெதுப்பிப் பொடித்துதிரிகடிப்பிரமாணந் தேனிற்கொள்ள நீங்கும்.

## ஆனந்தவாயுவுக்கு.

தும்பையிலையை எலுமிச்சங்காயளவில் அரைத்துபழச்சாற்றில் கலக்கக்கொடுக்க நீங்கும்.

பத்திரு எருக்கிலைக்குள் தோல்நீக்கின அரைப்பலம்வெள்ளைப்பூண்டை வைத்துக்கட்டிப் பிட்டவித்து இலைவெந்தபருவத்தில் எடுத்துச் சாறுபிழிந்து அந்தசாற்றில் பூண்டையரைத்துக்கொடுக்கவும் இந்தப்படி மூன்றுபொழுது கொடுக்கநீங்கும்.

ஒருஎலுமிச்சங்காயளவு மிளுப்பைபிண்ணாக்கை ஆழாக்கு புளிச்சாற்றில் ஊறப்போட்டு வெதுப்பிக்கொடுக்க நீங்கும்.

## வாயுக்குத்துக்கு.

கொடுவேலிப்பட்டை சுக்கு புறங்கிப்பட்டை பிறப்பங்கிழங்கு வகைக்கு விராகனிடை-௩ வீதஞ்சிதைத்து ௪-படி சலத்திற்போட்டு எட்டொன்றாய்வற்றிக் கியாழஞ்செய்துநாளொன்றிற்குமூன்றுநாள் கொடுக்கநீங்கும்.

## வாயுபொருமலின்குணம்.

வாயுப்பொருமி அக்கினிமந்தித்து உண்டை அசனத்தினைவார்க்கும் புளித்தேப்பமிடும் காற்றுப்பரியும்.

### கூழ்பாண்டச் சூரணம்.

ஒரு பெரும்பூசனிக்காயைக்கீறி குடல்மேற்றோல்நீக்கி அரிந்து பிட்டவியலாயவித்துப்பிழிந்து சட்டியிலிட்டு ஆவின்நெய்தெளித்து சிவக்கவறுத்திடித்த சூரணத்துடன் கடுக்காய்தான்றிக்காய் திரிகடுகு அதிமதுரம் ஏலம் லவங்கம் சண்பகப்பூ கல்மதம்சிரநம்வகைக்கு கழஞ்சு-௧ வெதுப்பிப்பொடித்த சூரணத்தையும்ஒன்றாய்கலந்து அதற்கு நிகர் சீனிகலந்து வேளைஒன்றுக்குத் திரிகடிப் பிரமாணங்கொள்ள மேகம்பவுத்திரமூலம் மூத்திரப்பாளை கிருச்சனம் பெரும்பாடு வெள்ளை கடுப்பு எரிப்பு மேககாங்கை கல்லடைப்பு நீரடைப்புத் தீரும்.

### இங்கிலாந்திச்சூரணம்.

பெருங்காயம் வசம்பு சட்டகரி மாதுளம்வேர் ஓமம் மல்லி கோஷ்டம் பொன்முசுட்டைவேர் செங்கழுநீர்க்கிழங்கு கொட்டாங்கரங்கரந்தை சமூலம் ஏலம் கொடிவேலிவேர் பஞ்சலவணம் செவியம் ஆனைத்திப்பிலி திரிகடுகு திப்பிலிமூலம் சீரகம் வாய் விளங்கம் குறுசாணிஓமம் கருவேப்பிலி ஓர்நிறையாய்ச் சூரணித்து திரிகடிப் பிரமாணம் வெந்நீரிற்கொள்ள அக்கினிமந்தம் வாய்நீரூறல் வாந்தி வெள்ளோக்காலம் வில்தீரும்.

### அக்கினிச்சூரணம்.

கொடிவேலிவேர் திரிகடுகு ஓமம் சிறுதேக்கு ஆனைத்திப்பிலி கோஷ்டம் இந்துப்பு வகைக்குப் பலம்-௧ காயம் வசம்பு சுட்டகரி வகைக்குப்பலம்௨ - கடுகுபலம்-௨ ஓர்நிறையாய்ச்சூரணித்து அதற்கு நிகர் சீனிகலந்து திரிகடிப்பிரமாணம் வெந்நீரிற்கொள்ள அஜீரணம மந்தம் பொருமல் கிராணிதீரும் பத்தியமில்லை.

### மேடச்சூரணம்.

வெள்ளாட்டு உதவலைநீரைப்பிசைந்து வறுத்திடித்துவடிகட்டினச்சூரணம் பலம்-௨ குங்குமப்பூகோரோசனை திப்பிலிமூலம் ஓமம் அரத்தைசீரகம் கருஞ்சீரகம் கிராம்பு சுத்திசெய்த மனோசிலை நெற்பொரி கோஷ்டம் வகைக்குக்கழஞ்சு-௧ வெதுப்பிப்பொடித்து இருவகைச்சூரணத்தையும்ஒன்றாய்க்கலந்து திரிகடிப்பிரமாணம் ஆவின் நெய்யில் மண்டலங்கொள்ள சிலேத்மநோய் ௯௬-ம் தீரும்.

### சீரகச்சூரணம்.

நாலுபலம்சீரகத்தை இஞ்சிச்சாற்றிலொருநாளூறவைத்துலர்த்தி அப்பால் முசுமுசுக்கைச்சாற்றிலொருநாளூறவைத்துலர்த்திக்கொண்டு ஏலம் திரிகடுகு கோஷ்டம் நெல்லிவற்றல் நெற்பொரி வில்வப்பழத்தோடு வகைக்குவிராகனிடை-௨ இவையெல்லாம்பொடித்து அதற்குநிகர்சீனிகலந்து வேளைஒன்றுக்குதிரிகடிபிரமாணஞ் சாப்பிட்டுவர பித்தம் அரோசியம் பித்தவாயு கிறுகிறுப்பு ஊஷ்ணம் வாய்நாற்றம் வளுவளுப்புத்தீரும்.

தாளிசப்பத்திரி பலம்-க திரிகடுகு திரிபலாதி ஏலம் கிராம்பு சாதிப்பத்திரி வகைக்குபலம்-உ சூரணித்து சீனிபலம்-உ கூட்டித் திரிகடிப்பிரமாணஞ் சாப்பிட்டுவர மூலாகடுப்பு இரத்தக்கடுப்புவெள்ளைவெட்டை நீர்க்கட்டு கல்லடைப்புத்தீரும்.

நிலவாகைச்சூரணம்.

நிலவாகைச்சமூலம் சுக்குமிளகு வாய்விளங்கம் ஓமம்வகைக்கு பலம்-க ரவியுலத்திப்பிடித்து சர்க்கரைசமன்கலந்துதிரிகடிப்பிரமாணம் சாப்பிட்டுவர வாயுபித்தம் ஊஷ்ணம்பொருமல் கபல் விக்கல் வாந்திதீரும்.

நிலவாகைசமூலம்-க0 மிளகுகடுக்காய் தான்றிக்காய்சீரகம்வசலுளுவையரிசி சிறுநாகப்பூ ஏலம் லவங்கப்பட்டை கடுகுரோகணி சிவதை தாளிபபத்திரி சாதிக்காய்கிராம்பு திப்பிலி செவியம் இந்துப்பு கூகைநீர் சுக்குபலம்-வ இடித்துச்சூரணஞ்செய்து அதற்குபாதி சீனிகலந்து திரிகடிநகய்தேனிற்கொள்ள மேகச்சொரி சிரங்கு பித்தம் வாய்வூறல் கிராந்திருடு சிலவிஷம்வாயு வாயுத்திரட்சிதீரும்.

இராஜ அமிர்தாதிச்சூரணம்.

ஏலம்லவங்கம் அதிமதுரம்நற்சீரகம்கருஞ்சீரகம் மகரப்பூ குஞ்சாணிஓமம் வால்மிளகு திப்பிலி வாய்விளங்கம்குங்குமப்பூ சடாமஞ்சில் மஞ்சிட்டி கடுகுரோகணி திப்பிலிமூலம் சாதிக்காய் கிராம்பு வசுவாசு சித்தரத்தை சித்திரமூலம் நிலவாகை இவைகளை ஓர்நிறையாய்ச் சூரணஞ்செய்து அதற்குநிகர் சீனிகூட்டி திரிகடிப் பிரமாணஞ் சாப்பிட்டுவர கைகாலுளைச்சல் உள்ளுருக்கி எலும்புருக்கி பிரமியம் கரப்பன்மூலம் வாதம்பித்தத் ஊஷ்ணவாயுமுதலான சகலவாயுவுந் தீபனமுண்டாகும் தேகங்குளிரும்.

பஞ்சலவணச்சூரணம்.

பஞ்சலவணம் எவாச்சாரம் சத்திசாரம் அசமதாகம் மாமஞ்சள்திப்பிலி திப்பிலிமூலம் மஞ்சள் முள்ளிவேர் கண்டங்கத்திரிவேர் கோஷ்டம் முத்தக்காசு சிறுதேக்கு கருஞ்சீரகம் நற்சீரகம்கடுகுதிரிபலை அத்திதிப்பிலி வாய்விளங்கம் பெருங்காயம் கொடிவேலி வேர் அதிவிடயம் செவியம் பங்கம் பாளைவேர் பெருமரத்துப் பட்டை வெட்பாலையரிசி இவைகளை ஓர்நிறையாயிடித்துச் சூரணஞ் செய்து அதற்குப்பாதிசீனிகலந்து நெய்யிற்கொள்ள அசீரணப்பேதிகிராணி வாயூறல் வாந்தி சூலைசீதசுரம் பாண்டுகாமாலை சுவாசகாசம் க்ஷயம் திமிர்வாயுமூலந்தீரும்.

சாத்துவாதிசூரணம்.

சித்திரமூலம் திப்பிலிஓமம் மிளகுமல்லி நற்சீரகம்பொன்முசட்டைவேர் பெருங்காயம் சடாமாஞ்சில் திப்பிலிமூலம் இந்துப்பு ஓர்நிறையாயிடித்து சூரணித்துத் திரிகடித்தேன் சீனியிற்கொள்ள அக்கினிமந்தம் அரசாரக்குன்மம் பித்தந்தீரும்.



### அசவகெந்திசூரணம்.

ஆவின்பாலிலவித்துச் சுத்திசெய்த அமுக்குறாவேர்பலம் ௩ சுக்கு ஏலம் கூகைநீர் வகைக்குபலம் கஉ கிராம்பு சிறுநாகப்பூபலம் உ திப்பிலிபலம் அ மிளகுபலம் ச இவைகளைபிடித்து பொடிசெய்து கற்கண்டுபலம் ச கூட்டிதேன் இஞ்சிற்சாற்றிற்கொள்ள மந்தவாயு தயிற்றுவலி அரோசியம் அரோசியம் வாதபித்தம் உப்பிசம் நெஞ்செரிவு வாந்தி க்ஷயம் ஈளை இருமல்தீரும்.

லவங்கம்பலம் க சிறுநாகப்பூபலம் உ ஏலம்பலம் ௩ மிளகுபலம் அ திப்பிலிமூலம்-கசு சுக்குபலம் ௩உ சுத்திசெய்த அசுவகெந்திபலம் கூச இடித்து பொடித்து அவற்குநிகர்சர்க்கரைகலந்துவேளை ஒன்றுக்குத் திரிகடிபிரமாணம் ஆவின்பால் நெய்யிற்கொள்ள மேகம் அஸ்திசுரம் அஸ்திவெட்டை சுவாசம் ஈளைபாண்டு மேகஊறல் தீரும்.

சுத்திசெய்த அமுக்குறாபொடி விராகனிடை கூச ஓமத்தைப் பொருத்து உமிபோக்கிபொடித்துவடிகட்டினபொடி விராகனிடை கூஉ கிறாம்பு விறாகனிடை க சிறுநாசப்பூ விராகனிடை உ ஏலம் விராகனிடை ச மிளகுவிறாகனிடை அ இவைகளைப்பொடித்து வடிகட்டினபொடியையும் ஒன்றாய்க்கலந்து வேளை ஒன்றுகருத் திரிகடிபிரமாணஞ் சாப்பிட்டுவர பிரமேகம்வெட்டை மூத்திரக்கிருச்சனம் தீரும் இதுகளெல்லா மிச்சாபத்தியம்.

### கரிசாலைசூரணம்.

கடுக்காய்மிளகு கோஷ்டம் ஓமம்மரமஞ்சள் கடுக்காய்ப்பூகருஞ்சீரகம சடாமாஞ்சில் திப்பிலிமூலம் கிறாம்பு தாளிசப்பத்திரிதிப்பிலி ஏலம் சுக்கு நெல்லிப்பருப்பு சீரகம் அதிமதுரம் மல்லி மாய்விளங்கம் முக்குருண்டிவேர் ஒர்நிறைநிரப் ரவியிலுலர்த்திசூரணித்து அதற்குநிகர் பொற்றலைக்கரிப்பான் பொடித்துசேர்த்துத் திரிலோகசெந்தூரம் மண்டூரசெந்தூரம் வைத்து வேளைஒன்றுக்குத் திரிகடிப்பிரமாணஞ் சாப்பிட்டுவர பாண்டுகாமாலை சோகைதீரும்.

### வல்லாரைச்சூரணம்.

வல்லாரையைப் பாலித்துலத்தி இடித்துவடிகொண்டசூரணம் பலம் ௪௦ கிராம்பு ஏலம்சாதிக்காய் சாதிப்பத்திரி மாசக்காய தாளிசப்பத்திரிதிரிபலாதி வகைக்குப்பலம் கவெதுப்பிப்பொடித்து ஒன்றாய்க்கலந்து சர்க்கரை சமன்கலந்து திரிகடிப்பிரமாணம் நெய்யில் கொள்ள மேகதாங்கை மூலச்சூடு உடம்பெரிவு தீர்ந்து தேகங்குளிரும்.

### சந்தனச்சூரணம்.

சந்தனம் கோஷ்டம் நன்னாரிவேர் கடுகுரோகணி கர்ப்பூரம்சீந்தச்சர்க்கரை முத்தக்காசுமஞ்சள் இலுப்பைப்பூ முந்திரிப்பழம் அதிமதுரப பூலாக்கிழங்கு ஏலம் தாமரைக்கிழங்கு நெய்தற்கிழங்கு மரமஞ்சள் விலாமிச்சுவேர் நெல்லிவற்றல் இவைகளை ஒர்நிறையாய் பொடித்து அதற்குநிகர் சர்க்கரைகலந்து திரிகடிபிரமாணம் வெண்ணெயிலாவது ஆவின்பாலிலாவதுகொள்ள சீதம்ரத்தம்விழுதல் வாயிலி ரத்தலங்கக்கல் முதலானமேகம இருபத்தொன்றுந்தீரும்.

### கர்ப்பூரச்சூரணம்,

கர்ப்பூரம் கோஷ்டம் சாதிரவேதி கல்நார்சாதிக்காய்கிராம்புடாமாஞ்சில் ஏலம்குங்குமப்பூ சந்தனம் நற்சீரகம்மல்லி அமுக்குறாக்கிழங்கு சீந்திச்சர்க்கரை முந்திரிகை பேரீத்துசலாசத்துநெருஞ்சிவேர் விளாவிரை நீர்முள்ளிவிரை இலவம்பிசின்முத்தக்காசு விலாமிச்சுவேர் இந்துப்பு வெங்காரம் ஆவாரையரிசி கஸ்தூரிமஞ்சள் சிறுநாகப்பூ நிலப்பனைக்கிழங்குகஞ்சாங்கோரை செஞ்சந்தனம் தக்கோலம் அதிமதுரம் வால்மிளகு இவைகளை ஒர்நிறைபாய்ப்பொடித்து அதற்குநிகர் கற்கண்டுகலந்து வேளை ஒன்றுக்குத் திரிகடிப்பிரமாணந்தேனிலாவது நெய்யிலாவதுகொள்ள நீர்கடுப்பு எரிவுநீரிழிவுமேககாங்கைநீரடைப்புபாண்டுகாமாலை கண்காலெரிவு சுரம்தாகம்தீரும்.

### அமிர்த சஞ்சீவிச்சூரணம்.

சீந்திச்சர்க்கரை பலம் ௧ முந்திரிப்பழம்தக்கோலம் கோஷ்டம் அதிமதுரம் திரிகடுகு நெல்லிவற்றல் பூஞ்சாந்துப்பட்டை அமுக்குறாக்கிழங்கு ஏலம் பூனைக்காலிவித்து சூடன்சிறுசீரகம் குங்குமப்பட்டை சாதிக்காய் அரேணுகம்சிறுநாகப்பூ தாளிசபத்திரி இவைகளைஒர்நிறையாயிடித்து வடிவட்டின பொடிபலம்-௧ நீர்வள்ளிக்கிழங்கு விராகனிடை ௫ நிலப்பனைக்கிழங்குவிராகனிடை ௫ விலாமிச்சவேர நெருஞ்சிவித்து வெட்டிவேர் தாமரைக்கிழங்கு அல்லிக்கிழங்குவகைக்கு விராகனிடை-௨ இவைகளையிடித்து வடிகொண்ட பொடியையும் ஒன்றாய்க்கலந்து திரிகடிப் பிரமாணம் ஆவின்நெய்யிற்கொள்ள நீர்க்கடுப்பு எரிவு அடைப்பு மூத்திரப்பாளை கைகால் காந்தல் எலும்புருக்கி பெரும்பாடுதீரும் இதுகளெல்லா மிச்சாபத்தியம்.

சீந்திச்சர்க்கரை பலம்-க சாதிக்காய்சாதிப்பத்திரி வால்மிளகு ஏலம் கிராம்பு கசகசா தாளிசப்பத்திரி மாசக்காய்இவைகளை ஓர்நிறையாயிடித்து வடிகட்டினசூரணம் சலம்-க சீனிபலம்-சு ஒன்றாய் கலந்து திரிகடிபிரமாணத்தில் வாலைரசசெந்தூரம் வைத்து நெய்யிற் கொள்ள மேகநீர்பிரமேகம் பிரமியம் அஸ்திசுரம் வெட்டைமூலசூடு பித்தம் கைகாலெரிவு மேகவூறல்தீரும்.

கொடிவேலிசூரணம்:

கொடிவேலிவேர் புங்கம்வேர் ஆவிலிப்பட்டை இவைகளின் சூரணம வகைக்குபலம்-க கடுக்காய் சுக்கு திப்பிலி கடுகுகரியசீரகம் வகைக்குபலம்-உ இவைகளைவெதுப்பி சூரணித்து ஒன்றாய்க்கலந்து வேளைஒன்றுக்குத் திரிகடிபிரமாணம் மண்டலங்கொள்ளவாதவாயு பட்சவாதம்தீரும்.

மதுராதிச்சூரணம்.

அதிமதுரம் கோஷ்டம் அக்கிராகாரம் விலாமிச்சுவேர் தக்கோலம் ஏலம் சிறுநாகப்பூ மல்லிகிரும்புசுறுதேங்குமிளகுதிரிபலைகூகைநீர் முத்வக்காசு திப்பிலிலவங்கம் லவங்கபத்திரி நன்னாரிவேர்பருத்திவிரைப்பருப்பு நெற்பொரி நற்சீரகம் வகைக்கு விராகனிடை-உ வெதுப்பிபொடித்து தாளிசபத்திரி சூரணம் விராகனிடை-ச சீனி பலம்-ச கூட்டி திரிகடிபிரமாணஞ் சாப்பிட்டு பித்தம் அரோசியம் நெஞ்செரிவு கிறுகிறுப்பு வாந்திதீரும்.

வச்சிரவலிசூரணம்.

திரிகடுகு திரிபலை கல்லுப்பு ஏலம்லபங்கம் சிற்றரத்தைதிப்பிலிமூலம் கருஞ்சீரகம் நசீரகம் பரங்கிப்பட்டை அக்கிராகாரம் இந்துப்பு இரும்பு சாதிக்காய் சாதிப்பத்திரி அமுக்குறாக்கிழங்குவகைக்கழஞ்சு-ச கடுகுரோகணி வெங்காரம் ஓமம்வகைக்குகழஞ்சு-உ நவாச்சாரம் கல்மதம் வகைக்குகழஞ்சு-க இவைகளைஇடித்துசூரணம்பாதியும் சீனிபாதியுங் கலந்து திரிகடிப்பிரமாணம் தேன்நெய் பாலிற் கொள்ள கபாலவாயு குன்மம் காசம் கபம் பித்தம் ஊஷ்ணம்வெட்டை அபானவாயுதீரும்.

மகாஏலாதிச்சூரணம் முற்றிற்று,

---

# மஸ்துமீகாரசாயனப் படலம்.

---

அதாவது சூரணபாகங்களை நெய்தேன் சர்க்கரைகலந்து கிளறியுண்ணுதலாம்:

கூறுமாந்தர்தானறிய குறிப்பாய்மருந்துரசாயனத்தை
தேறும்பாகம்தானறிந்து திறமாயருந்தவேண்டுமானல்
சோறும்வருடமொன்றுக்குள் கொள்ளும்விதியேசரியாகும்
மீறுமாண்டில்மேற்பட்டால் மீளாநோயும்மீளாதே.

இந்தரசாயனங்கள் மானிடர்கள் பிணியுண்டாயிருக்கும்போதும் சுகமாயிருக்கும்போதும் அருந்தவேண்டுமானல் ஒருவருஷத்திற்குள்ளாக சாப்பிடுவதே தேகத்திற்குவலுவு பிணியும்நீங்கும் மேற்பட்டால் வியாதிபோகாது அதனுல்பலனுமில்லைபண்டிதன்பேரிற் குற்றம் சாற்றுவண்ண மிகவுநன்மை.

விருத்தம்.

தீரும்லேகியரசாயனமுந் தெளிவாயறியமானிடற்கு
சாரும்பிணிகள்தானகல தயவாய்ப்பலநூலாராய்ந்து
சேரும்பாகம்பிசகாமல் தெளியவுரைத்தபண்டிதந்தான்
மேருமுனிவர்தான்கூடி மெய்யாயறைந்ததின்நூலே.

தண்ணீர்விட்டான்கிழங்கு கோரைக்கிழங்கு வகைக்குப்பலம்- அரை மூப்புரண்டி தூதுவேளை கண்டங்கத்திரி இவைகளின் மூலம் வகைக்குப்பலம்-க பிரப்பங்கிழங்கு அசுவகெந்திக்கிழங்கு வகைக்குப்பலம்-ங மல்லிசித்தரத்தை கோஷ்டம்லவங்கம் தாளிசப்பத்திரி வகைக்கு விராகனிடை-ங வெட்டிவேர் கூகைநீர் விலாமிச்சம்வேர் கடுகுரோகணி வகைக்குவிராகனிடை-ரு குங்குமப்பூ கோரோசனை பச்சைகர்ப்பூரம் வகைக்கு விராகனிடை-க தான்றிக்காய் வாய்விளங்கம் மாசக்காய் தேவதாரம் சிறுநாகப்பூவகைக்கு விராகனிடை-உ அதிமதுரம் கிராம்புசாதிக்காய் சாதிபத்திரிஏலம் அதிவிடயம்கொடிமுந்திரிப்பழம் பேரீச்சம்பழம் வகைக்கு விராகனிடை-ரு இவைகளை ரவியிலுலர்த்தித் தனித்தனியே இடித்துவடிகட்டியிடைப்படி ஒன்றாய்க்கலந்து ஆவின்பால்விட்டுப் பிசைந்து ஒருபடி ஆவின்பாலும் ஒருபடிதண்ணீருங் கலந்து ஒருசட்டியிலிட்டு துணியினல்வாயில் வேடுகட்டி அதின்மேற்பிசைந்த மருந்தைவைத்து சட்டியால் மூடி பால்வற்றும்வகை எரித்து மருந்தையெடுத்துலர்த்தி ஒருசட்டியில் மூன்றுபடி ஆவின்நெய்விட்டுத் தீபம்போலெரித்துக் கொதிக்கும்போது பத்துக்கதலி வாழைப்பழத்தை தோல்நீக்கிப் பணம்போற் கிள்ளிப்போட்டு அயக்கரண்டியாற் கிண்டிச் சிவந்துவரும்போது பத்துபலச்சீனியை போட்டுக்கிண்டி கரைந்த பருவத்தில் கீழ்விறக்கி ஷை சூரணத்தைத்தூவிக்கிண்டி ஆறினபின்பு அரைப்

படி தேன்விட்டு மிசர்மித்துக்கொண்டு வேளை ஒன்றுக்குப் புன்னைக் காய்பிரமாணம் மண்டலங்கொண்டால் நீரிழிவுநீர்க்கடுப்பு இற்று வடிதல் மேலிளைப்பு சித்தபிரமை வெட்டைவெடிசூலைசலக்கழிச்சல் மூலப்பாண்டு காமாலை சோகைகாசம் உழைமாந்தம் குன்மம் குஷ்டம் ரணமுருக்கி கிருகிருப்பு கபாலவாயுகண்டச்சூலை அண்டவாயு கன்னபுற்று மகோதரம் விக்கல் அதிசாரந்தீரும்.

நாடி பலத்து தாதுபுஷ்டி யுண்டாகும் பத்தியமில்லை ஆனால் அவபத்தியம் பழையதாகாது.

பரங்கிப்பட்டை அமுக்குறாக்கிழங்கு வகைக்கு பலம்-ம நிலப்பனைக்கிழங்கு பலம்-ரு தண்ணீர்விட்டான்கிழங்கு பலம்-உ நன்னாரிவேர் சங்கம்வேர் திரிகடுகு திரிபலை லவங்கப்பட்டை லவங்கப்பத்திரி சிறுநாகப்பூவாய்விளங்கம் மல்லிகருஞ்சீரகம் நற்சீரகம் ஓமம் குறாசாணி அரத்தை சந்தனஞ்சிறுதேக்கு கண்டங்கத்திரிவேர் கொடிவேலிவேர் விலாமிச்சுவேர் தக்கோலம் வால்மிளகு முந்திரிகை பேரீந்து வெட்பாலையரிசி தாமரைக்கிழங்கு சாதிக்காய்கிராம்புபத்திரி சரிவேப்பிலை வகைக்குப்பலம்-க குங்குமப்பூ கோரோசனை பச்சைகர்ப்பூரம் வகைக்குகழஞ்சு-க இவையெல்லாம் ரவியிலுலர்த்தி இடித்துச் சூரணஞ்செய்து முனைபோற் பிட்டவித் துலர்த்தி ஆவின்பால்படி நாலில் சீனிநாலுசேர்போட்டுப் பாகுசெய்து அப்பால் நெய்படி-உ கூடவிட்டுக்கிண்டி ஒன்றாய் லேகித்தபின்பு கீழே யிறக்கி மேற் சூரணத்தை தூவிக்கிண்டி ஆறினபின்பு தேன்படி-க விட்டுப்பிசைந்துக்கொண்டு வேளைஒன்றுக்குக்கொட்டைப்பாக்குப் பிரமாணம் ஒருமண்டலங்கொள்ள கிரந்திசூலை கண்டமாலைவாயுவாதம பிமியம லிங்கப்புற்று சிலேத்மரோகம் கசு-ம் தீரும்.

கெந்தரசாயனம்.

திரிகடுகு கிராம்பு ஏலம் லவங்கபட்டை லவங்கப்பத்திரி சாதிக்காய் தாளிசப்பத்திரி சிறுநாகப்பூ விலாமிச்சுவேர் ஓமம் சீரகம் குறாசாணிஓமம் சித்தரத்தை சித்திரமூலம் திப்பிலிமூலம பூலாக்கிழங்கு ஆனைத்திப்பிலி கருஞ்சீரகம் கூகைநீர்முந்திரிகை சந்தனம தக்கோலம் அதிமதுரம் முத்தக்காசு சடாமாஞ்சிமல்லிபேரீச்சம்பழம் திரிபலை சாதிப்பத்திரி வெட்டிவேர் குங்குமப்பூநிலப்பனைக்கிழங்கு அசுவகெந்திக்கிழங்கு நெருஞ்சி நீர்முள்ளிபூனைக்காலி இவைகளின் வித்து வகைக்கு விராகனிடை-ம பரங்கிப்பட்டை-உம இவைகளைத் தனித்தனியே இடித்துவடிகட்டி யிடைப்படி ஒன்றாய்க்கலந்துமுன் போற் பிட்டவித்துலத்தி எழுபதுபலச்சீனியை ஆறுபடி தண்ணீர் விட்டான்கிழங்குச் சாற்றிற்கரைத்துக் காச்சி பாகுபதத்தில் ஒரு படி ஆவின்நெய்யில் சுத்திசெய்த நாலுபலக்கெந்தகத்தை போட்டு கரையக்காய்ச்சி பாகில்விட்டுக்கிண்டி நீர்வற்றினதின் பேரிலிற்க்கி

அதில்சூரணத்தை தூவிக்கிண்டி. ஆறினபின்பு தேன்படி-௧ கூடவிட்டுப்பிசைந்து கலசத்திலடைத்து நெல்லுக்குள் பத்துநாள் வைத்தெடுத்து கழற்காய்ப்பிரமாணம் ஒருமண்டலம் பத்தியமாய்க்கொள்ள வாதம்எண்பது பித்தம்நாற்பது கிருச்சனம்ஆறு சூலை பதினெட்டு சோகை க்ஷயம் வேகம் அக்கினிமந்தம் தீரும்.

## கதலிரசாயனம்.

கோஷ்டம் பலம்-௪ கண்டதிப்பிலிசுக்கு சாதிக்காய்கிராம்புசீரகம் மிளகரணை சங்கம்வேர் வகைக்குபலம்-௨ இவைகளை யிடித்து வடிகட்டி முன்போல் பிட்டவித்துலர்த்தி இரண்டுபடி ஆவின்பாலில் நூறு கதலிப்பழத்தையும் பத்துபலச்சீனியையும் கரைத்துக்காய்ச்சி பாகுபதத்தில் ஒருபடி ஆவின்நெய்விட்டுக் கிண்டிக்கொடுத்து நீர்வற்றினதின்பேரில் கீழேயிறக்கிச் சூரணத்தை தூவிக்கிண்டி ஆறினபின்பு காற்படி தேனைவிட்டுப் பிசைந்துவைத்துக்கொண்டு வேளையொன்றுக்குக் கொட்டைப்பாக்கு பிரமாணத்தில் வங்கபற்பம்ரசபற்பம் வைத்துச்சாப்பிட பெரும்பாடு எலும்புருக்கி பிரமேகம் சூலை அரையாப்பு கிரந்தி அஸ்திசுரம் அஸ்திவெட்டை உஷ்ணம் எரிவு காந்தல் சிரங்கு சொறிகரப்பான் மேகஊறல் கிராணிமூலச்சூடு இளைப்பு இருமல் நீரிழிவு கிரிச்சனந்தீரும்.

## இஞ்சிரசாயனம்.

அரைப்படி வலுமிச்சம்பழச்சாற்றில் இந்துப்பைக் கரைத்து அதில்மேற்றோல்சீவி பணம்போலரிந்த இஞ்சிபலம்-ய போட்டு ௩-நாளும வைத்துலர்த்தி இடித்துவலிகட்டின சூரணத்தையும் திரிகடுகு திரிபலை சீரகம் சதகுப்பை மரப்பூ அதிமதுரம் அதிவிடயம் மல்லியும் கற்கடகச்சிங்கி தாளிசப்பத்திரி சோமனுப்பு பொட்டிலுப்பு லவங்கம் லவங்கப்பத்திரி சன்னலவங்கப்பட்டை வகைக்குப் பலம்-வ கோஷ்டம் அக்கிரகாரம் பெருங்காயம் வகைக்குப் பலம் அரிக்கால் பரங்கிப்பட்டை கொடிவேலி வேர்பட்டை வகைக்குப் பலம் மாகாணி இவைகளை வெதுப்பி இடித்து வடிகட்டின சூரணத்தையும் ஒன்றாய்க்கலந்து அதில் தேன் ஆவின்நெய் வகைக்குப்படி-வ விதம்விட்டு நன்றாய்ப்பிசைந்து வைத்துக்கொண்டு நெல்லிக்காய்ப்பிரமாணம் மண்டலங்கொள்ள அஷ்டகுன்மம் நெஞ்செரிவு வாந்தி குடற்புரட்டல் நக்கல்கழிச்சல் வயிற்றிரைச்சல் மண்டைக்குத்து பித்தபடபடப்பு வாய்நீரூறல் விலாக்குத்து ருத்திரவாயு செரியாமை அரைசோறுபோற் கழிதல் அபானக்கடுப்பு பொருமல் கைகாலோய்தல்தீரும்.

பாக்கிப்பட்டை விராகனிடை-௩௪ திரிகடுகுகருஞ்சீரகம்ஓமம் குறுசாணிஓமம் திரிபலை சிற்றரத்தை பேரரத்தை செவியம் வால்மிளகு கோஷ்டம் மல்லி கசகசா சடாமாஞ்சில் கிறும்பு சாதிக்காய் இலவங்கப்பட்டை இலவங்கப்பத்திரி தாளிசப்பத்திரி திப்பிலிமூலம் வகைக்குவிராகனிடை-௧ சீரகம் ஏலம் வகைக்கு விராகனிடை-௨ கொடிவேலி நன்னாரிசக்கு இவைகளின்வேர்நிலப்பனைக்கிழங்குஅமுக்குறாக்கிழங்கு வகைக்கு விராகனிடை-௧ இவைகளை ரவிபிலுலத்திகாலேயரைக்காற்படி ஆவின்நெய்யில்-௩௪ விராகனிடை சீனிகலந்துகாச்சி இளகினதின்பிறகு அதில்சூரணத்தைப்தூவிக்கிண்டி ஆறினபின் தேன்படி-வ விட்டுப்பிசைந்து வைத்துக்கொண்டு வேளைஒன்றுக்கு ஒருகொட்டைப்பாக்கு பிரமாணஞ்சாப்பிட்டுவர மேகவாயு வாயுத்திரட்சிதீரும் உப்பைக்கூட்டி புளிப்புகைதள்ளவும்.

மஸ்துமீகரசாயனப்படலம் முற்றிற்று.

---

## லேகியப் படலம்.

---

அதாவது எவ்வகை சூரணபாகங்களுடன் முக்கியமான செந்தூரங்கள் பஸ்பம் முதலானதுகளை மெழுகுபோல் இளகினபதத்துடன் கிளறி யுண்ணுதலாம்.

விருத்தம்.

பூட்டினார்லேகியத்தின் வபதுமார்க்கம்
　பொல்லாதபாவிகட்கும் கருமிகட்கும்
காட்டினார்வபதுதான் திங்கள்எட்டு
　களிப்புறவேதின்பதுவு மமிர்தமாகும்
மாட்டினார்சித்தர்கள்தான் செய்புமார்க்கம்
　மகிமைபடாமண்டலத்தில் யார்க்குங்கிட்டா
மூட்டினார்வயித்திய சங்கிரகமாக
　முழுமக்கள்தானறிய மொழிந்திட்டாரே.

இதன் தாத்பரியம் லோகத்துமானிடர்கள் அறியவேண்டிஇந்நூலிற்சொல்லிய லேகியங்களை எட்டுமாதத்திற்குள் சாப்பிடுவதேதேவாமிர்தமாகும் மேற்பட்டால் விஷாமிர்தமாகும் ஆனால்பெரும்பாலும் பிணியாளர்க்கு பண்டிதன்கவனித்து அவிழ்தங்களின் வயதறிந்து கொடுக்கவேண்டும் என்பதாம்.

## அமிர்தசஞ்சீவிலேகியம்.

வல்லாரைசிறுபுள்ளடி கொடுப்பைசிற்றாமுட்டி தாழைவிழுது வகைக்குபலம்-ரு இடித்து உ௰-படி சலத்திற்போட்டு வற்றவைத்த கியாழம் ஆவின்பால் இளநீர்வகைக்குப்படி இரண்டனை ஒன்றாய்க் கலந்து அதில்மேற்பாணை நீக்கின பத்துபலம் இஞ்சியை மயனமாயரைத்துப்போட்டு வேகவைத்து வெந்ததின்பேரில் சீனிகற்கண்டு வகைக்குப்பலம்-கஉ-வீதம்போட்டுப்பாகுசெய்து கோஷ்டம் வால்மிளமி ஏலம் கருஞ்சீரகம் நற்சீரகம் சாதிக்காய்கிராம்பு அக்கிராகாரம் சிவதை ஓமம் நறுக்குமூலம் திரிகடுகு அரத்தை சாதிபத்திரி தாளிசபத்திரி அதிவிடயம திரிபலை வகைக்குப்பலம் அரைவீதம் வெதுப்பிப்பொடித்தசூரணத்தையும் வில்வப்பூபாசிலவித்துச்சுத்திசெய்த பரங்கிப்பட்டை வகைக்குப்பலம்-உ அன்னபேதிகாயம்மூன்றிரிகைப்பழம் பேரீச்சம்பழம கூகைநீர் வகைக்குப் பலம் அரை குங்குமப்பூ கோரோசனை கஸ்தூரி பச்சைகர்ப்பூரம் அபின் வகைக்குக்கழஞ்சு கூ-வீதம் பொடித்த சூரணத்தையும் அரைப்பலத்தேற்றாவிரையை ஆவின்பாலில் ஊறவைத்து அரைத்தையும் நாலுபலம் சீந்திற்சர்க்கரையும் சிறுகச்சிறுகப்போட்டு மருந்துக்குத்தகுந்த நெய்யைச் சிறுகசிறுக விட்டுக்கிண்டி மெழுகுபதத்தி லிறக்கிஆற்றி ஒருபடித் தேன்விட்டுப்பிசைந்து வேளைஒன்றுக்கு ஒருகொட்டைப்பாக்குப் பிரமாணஞ் சாப்பிட்டுவர மேகத்திலெடுத்த சகலரோகமும் அஸ்திசுரம் காங்கைசீதம் இரத்தம்விழுதல் வாயுபாண்டு சோகை காமாலை முதலான சகலரோகமுந்தீரும்.

## குண்டலாதிலேகியம்.

சங்கம்வேர்பலம்-எ செவியம் கண்டங்கத்திரிவேர் வகைக்குப்பலம்-ரு வல்வம்கொடிவேலி சீந்தில்நிலப்பனை சிற்றாமுட்டிகொட்டி அமுக்குரா இருவேலி இவைகளின்மூலம் திப்பிலிமூலம் வகைக்குப்பலம்-உ௰ இவைகளையிடித்து எட்டுமரக்கால் சலத்திற்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்து குழம்பாய்க்காய்ச்சி கூகைநீர் பலம்-ச சிறுநாகப்பூ கருஞ்சீரகம்நற்சீரகம் வகைக்குபலம்-கூ ஏலம் லவங்கம் முத்தக்காசு சிறுதேக்கு கற்கடகச்சிங்கி திப்பிலிமூலம்சாதிக்காய் பெருங்காயம் வகைக்குப்பலம்-உ இவைகளையிடித்து வடிகட்டினசூரணத்தையும் அரைப்படி சுக்குச் சூரணத்தையும் அரைப்படி மிளகுத்தூளையுந்தூவி ஒருபடி தேன்விட்டுப் பிசைந்துக்கொண்டு வேளைஒன்றுக்கு கொட்டைப்பாக்குப் பிரமாணம் ஒருமண்டலம் பத்தியமாய்ச் சாப்பிட்டுவர சிலேத்மரோகம் கூகூ-ம் சகலவாயுவும் குன்மம் அ-ம் விக்கல் வாந்தி ஒக்காளம் பீனிசம் சன்னி தோஷம் சுரம்சூத்து உளைவு வயிற்றுப்பிசம் அக்கினிமாந்தம் செறியாமை நெஞ்செரிவு பித்தமுந்தீரும்.

## கூழ்பாண்ட லேகியம்.

கூழ்பாண்டச்சாறுபடி-௪ தாழைவிழுது தென்னம்பூ எலுமிச்சம்பழம் இவைகளின் சாறுவகைக்குப்படி-க ஆவின்பால்படி-௨ ஒன்றாய்க்கலந்து ம-பலச் சர்க்கரையைக்கலந்து காய்ச்சி பாகுசெய்து அதில்சீரகம் மல்லிகோஷ்டம் மிளகுமாசக்காய் ஏலம் சாதிக்காய் சாதிப்பத்திரி அதிமதுரம் தாளிசப்பத்திரி வகைக்குப்பலம்-க சூரணித்துத்தூவி நெய்படி-அரை விட்டுக்கிண்டி மெழுகுபதத்தி லிறக்கி ஆற்றி தேன்படி-அரை விட்டுப்பிசைந்து புன்னைக்காய் வீதஞ் சாப்பிட்டுவர காமாலைசோகை அஸ்திசுரம் அஸ்திவெட்டை பிரமியம வெள்ளைவிழுதல் நீர்ச்சுருக்கு ஊஷ்ணரோய்தீரும் தேகம் புஷ்டியாகும் விந்தூறும் புளிபுகையிலைதள்ளவும்.

## வில்வாதிலேகியம்.

மேற்றோல்போக்கின வில்வவேர் துலாம்-க சங்கு அமுக்குறா சத்திச்சாரணை மிளகரணை விலாமிச்சு முக்காவேளை நன்னாரி மணிவேம்பு அறுகுகற்றாழைதாழை கீழ்க்காய்நெல்லி விளாவெள்ளறுகு நெல்லிவேலிப்பருத்தி தூதுவேளை குட்டி விளா நெரிஞ்சி சிறுவழுதலை இவைகளின்மூலம் வகைக்குப்பலம்-ம இருதூணிநீரிற்போட்டு வற்றவைத்தகியாழம்படி-௪ கரிசாலை வல்லாரை நெல்லிக்காய் புளியாரை மணத்தக்காளிகுமட்டி மாதுளம்பழம்நீர்முள்ளி ஆடாதோடை மொசுமுசக்கை இவைகளின்சாறுவகைக்குப்படி-க ஆவின்பால் படி-௨ ஒன்றாய்க்கலந்து ஐம்பதுபலச் சீனியைகலந்து காச்சி பாகுசெய்து அதில்சாதிக்காய் கிராம்பு சாதிப்பத்திரி வால்மிளகு குருசாணிஓமம் மதுரம்கோஷ்டம் சன்னலவங்கம் சடாமாஞ்சில் வாலுளுவையரிசி தாளிசபத்திரி வாய்விளங்கம் கருஞ்சீரகம்அதிவிடயம அரத்தை பேரரத்தை கடுக்காய்ப்பூ ஓமம் மரமஞ்சள் கஸ்தூரிமஞ்சள் திப்பிலிமூலம் விளாவரிசி வெட்பாலையரிசி மல்லி கூகைநீர்காட்டாத்திப்பூ விளாம்பழத்தோடு சிறுதேக்கு நிலவேம்பு இலுப்பைப்பூ சந்தனம் வகைக்குப்பலம்-வ வெதுப்பி பொடித்துததூவி நெய்படி-க கூடவிட்டுக்கிண்டி மெழுகுபதத்தி லிறக்கியாற்றி தேன்படியறைவிட்டுப்பிசைந்து ஒருமண்டலங்கொள்ளதானியபுடம்வைத்து வேளை ஒன்றுக்கு ஒருகொட்டைப்பாக்கு பிரமாணம் திரிலோகசெந்தூரம்வைத்து ஒருமண்டலங்கொள்ள பித்தம் நாற்பது உப்பிசம் ஊஷ்ணவாயு கைகாலெரிவு காந்தல் அரோசியம் கசப்பு அன்னத்துவேஷம் வாந்திவிக்கல் வெள்ளோக்காலம் அஸ்திசுரம் அஸ்திவெட்டை மயக்கம் கிருகிருப்பு குலையெரிவு குன்மம் மேல்மூச்சு ஏங்கல் கிராணிகழிச்சல் காமாலை சோகைபாண்டு நீரிழிவு அந்தரவாயுமுதலான வியாதிகள்தீரும்.

வில்வவேர்பலம்-ரு இடித்து இருதூணிநீரிற்போட்டெட்டிலொன்றாய் வற்றவைத்து வடித்து ஆறுபலம் சர்க்கரையைக்கரைத்துப் பாகுசெய்து மிளகு செவியம் திப்பிலி இவைகளின்பொடிவகைக்கு படி-வ ஏலம் இலவங்கம் சுக்கு சிறுநாகப்பூ தாளிசப்பத்திரி வகைக்குப்பலம்-க சாதிப்பத்திரிகிராம்பு வகைக்குபலமரை இவைகளையிடித்துவடிகட்டின தூளைத்தூவி நெய்படி அரைக்கால் விட்டுக்கிண்டி இறக்கி யாற்றி தேன் படி அரைக்கால் விட்டுப் பிசைந்து வேளைஒன்றுக்கு கொட்டைப்பாக்குபிரமாணஞ் சாப்பிட்டுவந்தால் வயிற்றுவலி குன்மம் இருமல் ஈளைகாசம் நெஞ்செரிவு வாயு கிராணி அதிசாரம் பித்தகாசம் தேகதாகந்தல் நீரேற்றம் விக்கல்விடபாண்டுசுரம் உப்பிசம் வயிற்றுளைச்சல் வாந்தி பித்தம் மலக்கட்டு தீரும்.

வில்வவேர்துலாம்-க இடித்துஇருதூணித் தண்ணீரிற்போட்டு எட்டிலொன்றாய் வற்றவைத்துவடித்து நாற்பத்தொருபலங்கற்கண்டைக்கரைத்து பாகுசெய்து சுக்குபலம் நாலரை மிளகுசிறுநாகப்பூ திப்பிலி வகைக்குப்பலம் இரண்டரை அரத்தைசெவியம்சீரகம்வகைக்குபலம் மூன்றரை தேற்றாவிரை கொடிவேலிவேர் வகைக்கு பலம் ஒன்றரை ஏலம்லவங்கம் பச்சிலைகச்சோலம் வகைக்குகழஞ்சு-க இடித்துத்தூவி நெய்தேன்விட்டுக்கிண்டி லேகியஞ்செய்து வேளைஒன்றுக்கு பொட்டைபாக்குபிரமாணஞ் சாப்பிட்டுவர முந்தினபிரயோகத்திற் சொல்லிய பிணிகள்தீரும்

வில்வவேர் பலம்-ரு அதின்பழம்-உ0 முடித்துப் பதக்குநீரிற் போட்டு மூன்றுபடியாய் வற்றவைத்த கியாழத்தில் வெல்லமபலம் ய் கரைத்துக்காய்ச்சி பாகுசெய்து திப்பிலிமூலம் செவியம் சித்திரமூலம் மிளகு சீரகம் ஏலம் லவங்கம் சிறுநாகப்பூ தாளிசப்பத்திரி அதிமதுரம் கூகைநீர் வாலுளுவைபரிசி சடாமாஞ்சில் அதிவிடயம் அகில் இந்துப்பு வகைக்குபலம்-உ குங்குமப்பூ கிராம்பு சாதிபத்திரி சாதிக்காய் கோரோசனை வகைக்கு விராகனிடை-உ வெதுப்பிபொடித்துதூவி நெய்தேன்விட்டு லேகியஞ்செய்து வேளை யொன்றுக்கு கொட்டைப்பாக்குப் பிரமாணஞ் சாப்பிட்டுவர குன்மம் சத்திவிக்கல் நெஞ்சுவடி அரோசியம்மூக்குநீர்பாய்ச்சல் குலையெரிவு காமாலை கிராணி ஈளைஇருமல் வயிற்றுவலி கிருமிமூலந்தீரும்.

வில்வவேர்பலம்-ா விலாமிச்சுவாகை பாதிரிவிளாநன்னாரி சிற்றாமுட்டி பேராமுட்டி குட்டிவிளாவிலாவிரை முன்னை முசுமுசுக்கை கொடிவேலி தேற்றா இவைகளின்மூலம் வகைக்குபலம்-ரு இடித்து இருதூணிநீரிற்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்துவடித்துகியாழத்துடன் குமட்டி மாதுளம்பழச்சாறு இஞ்சிச்சாறு வகைக்குபடி க ஆவின்பால் படி-உ விட்டுநாலுசேர் சர்க்கரையைக் கரைத்துக் காய்ச்சிப் பாகுசெய்து திரிகடுகு திரிபலாதி லவங்கம் ஏலம்கோஷ்

டம் மதுரம் கொந்தகம் சீரகம் கருஞ்சீரகம் வாய்விளங்கம் சாத்திரவேதி தாளிசப்பத்திரி சண்பகப்பூ அக்கிராகாரம் மல்லி விளாவரிசி சிறுதேக்கு முந்திரிகை பேரீந்து வில்வப்பூ வாலுளுவையரிசி சடாமாஞ்சில் சிறுநாகப்பூ நாகணம் பருத்திப்பருப்பு நிம்பவித்து இலுப்பைப்பூ வகைக்குபலம்-௧ இவைகளையிடித்துசூரணித்துத்தூவிநெய்படி அரை விட்டுக்கிண்டி மெழுகுபதத்திலிறக்கி ஆற்றி தேன்படி அரை விட்டுக்கொண்டு வேளையொன்றுக்கு ஒருகொட்டைப்பாக்குப் பிரமாணஞ் சாப்பிட்டுவர அரோசியம்வீக்கம் சதிபாண்டு விடபாண்டு வயிற்றெரிவு உப்பிசம் கிராணி கைகாலெரிவு காந்தல் அன்னத்துவேசம் க்ஷயம் சுவாசகாசம் சூலசுரம்-௯௪ பித்தம்-௪௰ அதிசாரம்தீரும்.

வில்வம் முக்காவேளை சுக்கு இவைகளின்வேர் வகைக்குபலம் ௨௰ சிற்றாமுட்டி பலம்-௰ கூந்தல்முள்ளி சாரணை கண்டங்கத்திரிவிலாமிச்சு சிந்தில் கொடிவேலி பொன்முசுட்டை நன்னாரி இவைகளின் மூலம் சிறுதேக்குவகைக்குபலம்-௫ காட்டுமல்லிகைபலம்-௨ இவைகளையிடித்து இருதூணிநீரில்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்தகியாழத்துடன் ௨-படி பால்விட்டு நாலுசேர் சர்க்கரையைக் கரைத்துப்பாகுகாய்ச்சி அதில்திரிகடுகு திரிபலாதிகிராம்பு ஏலம் கருஞ்சீரகம் நற்சீரகம் கோஷ்டம்தாளிசபத்திரி ஓமம்குரோசாணிஓமம் சித்தரத்தை மல்லி லவங்கப்பட்டை அக்கிராகாரம் ஆனைத்திப்பிலி வாலமிளகு சாதிக்காய்இந்துப்பு வகைக்குப்பலம்-௧ வெதுப்பிபொடித்துதூவி நெய்படி-௧ விட்டுக்கிண்டி மெழுபதத்திலிறக்கி ஆற்றி தேன்படி-அரை அயச்செந்தூரம் மண்டூரச்செந்தூரம் வகைக்குபலம்-௨ சேர்த்துப்பிசைந்து வேளையொன்றுக்கு கொட்டைப்பாக்கு பிரமாணஞ்சாப்பிட ஷை வியாதிகள்தீரும்.

நெல்லிக்காய்லேகியம்.

நெல்லிக்காய்சாறுபடி-௮ இஞ்சிச்சாறு ஆவின்பால் இளநீர் வகைக்குபடி-௧ வில்வவேர்சிற்றாமுட்டிவேர் வகைக்குப்பலம் இரண்டரை இடித்தெட்டுபடிதண்ணீரிற்போட்டு வற்றவைத்தக்கியாழம்படி ௧௨ ஒன்றாய்க்கலந்து சீனிபலம்-௬ கற்கண்டு பலம்-௰ கரைத்துக்காய்ச்சி பாகுபதத்தில் சுக்கு கண்டதிப்பிலி கருஞ்சீரகம் அதிமதுரம் வகைக்குபலம்-௧வ மிளகுதிப்பிலி கடுகு வாய்விளங்கம் முந்திரிப்பழம் பேரீச்சம்பழம் வகைக்குபலம் அரையே அரிக்கால் நற்சீரகம் சாதிக்காய் தான்றிக்காய் கடுக்காய் வகைக்குப்பலம்-௨௨ இலுப்பைப்பூ மல்லி சன்னலவங்கம் வகைக்குப்பலம்-வ சாதிப்பத்திரி வெட்பாலையரிசி கோஷ்டம் சதகுப்பை தாளிசப்பத்திரி லவங்கப்பத்திரி இந்துப்பு வெங்காரம் சவுங்காரம் அமுக்குறாவேர் நன்னாரிவேர் ஆடுதீண்டாப்பாளைவேர் சிறுதேக்கு ஆனைதிப்பிலி கற்கடகச்சிங்கி கூகைநீர் வகைக்குவிராகனிடை-௨௨ குரோசாணி ஓமம்வெடி

யுப்பு கஸ்தூரிமஞ்சள்வளையலுப்பு பெருங்குரும்பைவகைக்குவிராக னிடை-கவ வலம்புரிக்காய்விராகனிடை-கஉ பெருங்காயம்விராகனி டை அரை இவைகளைப்பொடித்துக்தூவி மருந்துக்குதக்க ஆவிநெ ய்விட்டுக்கிண்டி மெழுகு பதத்திலிறக்கி ஆற்றி தேன்விட்டுப் பிசை ந்துவேளை ஒன்றுக்குக்கொட்டைப்பாக்கு பிரமாணஞ்சாப்பிட்டுவர பித்தம்வாயு அரோசியம் இருமல் சுவாசகாசம் க்ஷயம் எலிகடி கா வரட்சி உட்சுரம் கிராணிஅக்கினிமந்தம் குன்மம் கைகால் உடம்பெ ரிவு பித்தகாமாலை சோகை நெஞ்சுத்துடிப்பு கிறுகிறுப்பு எலும்புரு க்கி நீர்த்தாரைஎரிவு சுருக்கு வியர்வைதீரும்.

அறுபதுபலம்நெல்லிவற்றலை நஉ-படி தண்ணீரிற்போட்டுஎட் டொன்றாய் வற்றவைத்து வடித்தகியாழத்தில் உ0-பலச் சர்க்கரை யைப் பாகுசெய்து அதில்அதிமதுரம் கூகைநீர் முந்திரிப்பழம்வகை க்குபலம்-உ பேரீச்சபழம் திப்பிலி வகைக்குபலம்-ங இவைகளை யரைத்துநெய்விட்டுக்கிண்டி மெழுகுபதத்தில் தேன்விட்டுப் பிசை ந்து வேளை ஒன்றுக்கு டன்னேங்காய்பிரமாணங் கொள்ள வாந்திபித் தம் காமாலை பித்தபாண்டு வரட்சிதிமிர்வாயு சோகை நீர்ச்சுருக்கு குன்மம் உடம்பெரிவுதீரும்.

ள-பல நெல்லிவற்றலைத்தூளித்துநீரிற்போட்டு எட்டொன்றாய்வற் ற்றவைத்துவடித்தகியாழத்தில் பத்துபலச்சீனியைக்கரைத்துபாகு செய்து அதில்சுக்கு ஓமம்மூலம் கிராம்பு தக்கோலம் ஏலம் குங்கிலி யம் குக்கில் வாய்விளங்கம் சீரம் கொத்தமல்லி கூகைநீர் அதிமது ரம் வகைக்கு பலம்-க இடித்துத்தூவி ஒருபடிநெய் விட்டுக்கிண்டி மெழுகுபதத்திலெடுத்து வைத்துக்கொண்டு வேளை ஒன்றுக்கு ஒரு கொட்டைபாக்கு பிரமாணஞ் சாப்பிட்டுவர அஸ்திசுரம் உழலைகாந் தல் கிராணி வாயுபொருமல் இருமல் க்ஷயம் ஈளை தீரும்.

## தான்றிக்காய்லேகியம்.

ள-பலத் தான்றிக்காயைத் தூளிநீரிற்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்தகியாழத்தில பத்துபலச்சீனியைக் கரைத்துப் பாகுசெய்து அதில்அதிவிடயம் சாதிக்காய் அபின்கஞ்சாவகைக்கு பலம்-க சூரணஞ்செய்துஒருபடிநெய்விட்டுக்கிண்டிலேகியஞ்செய்து வேளை ஒன்றுக்கு ஒருசுண்டைக்காய்பிரமாணஞ் சாப்பிடுவர்பொரு மல் வாயுகடுப்பு இரத்தம் அதிசாரகிராணிமூலம் ஊஷ்ணந்தீரும்.

## கடுக்காய்லேகியம்.

ள-பலக்கடுக்காயை இடித்து தூணிநீரிற்போட்டு எட்டொன் றாய் வற்றவைத்து வடித்தகியாழத்தில் பத்துபலச் சர்க்கரையை கரைத்துபாகுசெய்துஅதில்சிவதைஇஞ்சிமிளகு ஓமம்வாய்விளங்கம் திப்பிலிவகைக்குபலம்-க இவைகளை அரைத்துப்போட்டுஆவின்நெய்

படி-க விட்டுக்கிண்டிலேகியஞ்செய்து வேளையொன்றுக்கு புன்னைக்காய்ப்பிரமாணங்கொள்ள அக்கினிமந்தம் சூலை மலசலக்கட்டு வாயு மூலந்தீரும்.

கொட்டைநீக்கிய கடுக்காய்பலம்-ர சிவதைபுளியாரை வல்லாரை சூரத்துநிலாவரை வகைக்குபலம்-உ கடுகுரோகணி இரும்புதிப்பிலி சிறுநாகப்பூ வாலுளுவையரிசிசற்கடகச்சிங்கி கருஞ்சீரகம்மிளகு தான்றிக்காய் மல்லி தாளிசப்பத்திரி வகைக்கு பலம்-வ இவைகளையிடித்துச் சூரணஞ்செய்து அதற்குப்பாதி சர்க்கரைகலந்து நெய் தேன்விட்டு லேகியஞ்செய்து வேளை ஒன்றுக்கு கொட்டைப்பாக்குப் பிரமாணஞ் சாப்பிட்டுவர மலசலக்கட்டு உஷ்ணம் வாயு மேககாந்தல் கால்கையெரிவு சூலையெரிவு குடலைப்புரட்டல் மூலைச்சூடுகாந்தல் இளைப்புவரட்சி புகைச்சல் இருமல்தீரும்.

சுக்குலேகியம்.

௱-பல சுக்கைச்சிதைத்து தூணிநீரிற் போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்தகியாழத்தில் பத்துபலபனைவெல்லத்தை கரைத்து பாகுசெய்து ஓமச்சூரணம் கருவேப்பிலைச்சூரணம் வகைக்குப் படி அரை வீதம்தூவி அரைப்படிநெய்விட்டுக் கிண்டி வைத்துகொண்டு வேளைஒன்றுக்குக் கொட்டைப்பாக்குப் பிரமாணஞ் சாப்பிட்டுவர கிராணிமூலம் திசைவாயு அதிசாரம் கடுப்பு இரத்தம் பாரிசவாயு வீக்கம் சூலை பொருமல் மந்தம் செறியாமை புளித்தேப்பந்தீரும்.

மிளகுலேகியம்.

௱-பல மிளகைச்சிதைத்து தூணிநீரிற்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்தகியாழத்தில் பத்துபலங்கற்கண்டைக் கரைத்துப்பாகுசெய்து அக்கிராகாரம் சீரகங்கிராம்பு ஏலம்கோஷ்டம் அதிமதுரம் வாய்விளங்கம் பத்திரி நறுக்குமூலம் வகைக்குப் பலம்-க இடித்துத்தூவி படிநெய்விட்டுக்கிண்டி மெழுகுபதத்திலாற்றி தேன்படிஅரைவிட்டுப்பிசைந்து வேளைஒன்றுக்குக் கொட்டைப்பாக்குபிரமாணஞ் சாப்பிட்டுவர சிலேத்மம்-௬௬ கபம் நீர்த்தோஷம் சில்விஷம்வாதம் வாயுதீரும்.

திப்பிலிலேகியம்.

௱-பலத் திப்பிலியைத்தூணிநீரிற்சிதைத்துப்போட்டுஎட்டொன்றாய் வற்றவைத்துவடித்து அதில்பத்துபலசற்கண்டைக்கரைத்து பாகுசெய்து சுக்குஅரத்தை அக்கிராகாரம் கடுக்காய் ஓமம் சீரகம் கொத்தமல்லி வெப்பாலையரிசிசண்பகப்பூ கோஷ்டம்வகைக்குபலம் க-பொடித்துவடிகட்டித்தூவி அரைப்படி நெய்விட்டுக்கிண்டி தேன்படிஅரைக்கால்விட்டுப்பிசைந்து வேளைஒன்றுக்கு புன்னைக்காயளவு கொள்ள மண்டலத்தில் சிலேத்மம்-௬௬ வாதம் அதிசாரம் வாயு குன்மம் உப்பிசம் நீங்கும்.

## வெள்ளைப்பூண்டுலேகியம்.

௱-பலம் வெள்ளைப்பூண்டைத் தூணிநீரிற்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்து அதில் பத்துபலச் சீனியைப்போட்டு பாகுசெய்து பெருங்காயம் சுக்கு வால்மிளகு கடுகு இந்துப்பு ஓமம் ஏலம் திப்பிலி மிளகுசீரகம் திரிபலை வெட்பாலையரிசி அதிவிடயம் வாய்விளங்கம் வகைக்குபலம்-க பொடித்துத்தூவிக் கால்படி ஆவின் நெய்யை விட்டுக்கிண்டி மெழுகுபதத்திலெடுத்து, வேளை ஒன்றுக்கு புன்னைக்காயளவு கொள்ள வாயுவும் குன்மமெட்டும்நீங்கும்.

## கடுகுலேகியம்.

௱-பலக்கடுகைத் தூணிநீரிற்போட்டெட்டொன்றாய்வற்றவைத்து வடித்து அதில்பத்துபலம் கருப்புக்கட்டியைக் கரைத்துப் பாகு செய்து ஓமம்சுக்கு திப்பிலிகிராம்புகாயம்கொத்தமல்லி சீரகம்வாய் விளங்கம் மஞ்சள் அதிவிடயம் வகைக்குபலம்-க இடித்துத் தூவிக் கால்படி நல்லெண்ணெய் விட்டுக்கிண்டி மெழுகுபதத்திலெடுத்துக் கொண்டு வேளை ஒன்றுக்குப் புன்னைக்காயளவுகொள்ள மூலரோகம்வாயு உதிரத்திரட்சி புளித்தேப்பம் செரியாமை பொருமல் குன்மவாயு மலசலக்கட்டுத்தீரும்.

## வெந்திய லேகியம்.

௱-பலம் வெந்தயத்தைதூணிநீரிற்போட்டெட்டொன்றாய்வற்ற வைத்து வடிகட்டி பத்துபலஞ்சர்க்கரையைக்கரைத்துபாகுசெய்து அதில் அதிமதுரம் கோஷ்டம் சீரகம்கசகசா அதிவிடயம் ஓமம்சா திக்காய் கிராம்பு அபின் கஞ்சாசுக்கு குறாசாணிவகைக்குப்பலம்-க பொடித்துத்தூவி படிநறுநெய்விட்டுக்கிண்டி மெழுகுபதத்திலெடுத் துவைத்துக்கொண்டு வேளைஒன்றுக்கு ஒருகழஞ்சுவீதஞ்சாப்பிட்டு வர கிராணிகடுப்புத் தீரும்.

## ஓமலேகியம்.

௱-பலம் ஓமத்தைத் தூணிநீரிற்போட்டு எட்டொன்றாய் வற்ற வைத்து வடித்து அதில் பத்துபலச் சருக்கரையைக்கரைத்து பாகு செய்து அமுக்குறாக்கிழங்கு சுக்கில் பரங்கிப்பட்டை கார்கோலரிசி வகைக்குப்பலம்-க பொடித்துத்தூவி நறுநெய்படிவிட்டுக்கிண்டிலே கியஞ்செய்து வேளைஒன்றுக்கு ஒருகழஞ்சுவீதம் சாப்பிட்டுவர பரங்கி சூலைசிரங்கு குஷ்டம் கிரந்திப்புண் சில்விஷம் வாயுத்தீரும்.

## பெருங்காயலேகியம்.

பெருங்காயம் பலம்-௨0 தூணிநீரிற்போட்டு எட்டொன்றாக்கி பத்துபலச் சீனியைப்போட்டு பாகுசெய்து வெள்ளைப்பூண்டு கடுகு மிளகுசுக்கு வகைக்குபலம்-க பொடித்துத்தூவி ௨-படி ஆவின்நெய் விட்டுக்கிண்டி மெழுகுபதத்திலிறக்கி வேளை ஒன்றுக்கு ஒருகழஞ்சு வீதங்கொள்ள வாயுவாதந் தீரும்.

## இஞ்சிலேகியம்.

ஒருபடி ஆவின்நெய்யில் முப்பதுபலச் சீனியைக்கலந்துகாய்ச்சிச் சரைந்தபின்பு இறக்கி அதில்மேற்றோலைநீக்கின பத்துபலம் இஞ்சியை எலுமிச்சம்பழச்சாற்றால் மயனமாயரைத் துலர்த்தினசூரணத்தையும் அறிந்து உப்புக்கலந்து மோரில்போட்டு ஊறவைத்துலர்த்தின பிரண்டை உலர்ந்தகரிப்பான் பூவரசம்பட்டை வகைக்குப் பலம்-க வாலுளுவையரிசி தாளிசபத்திரி சுக்குமல்லி சித்திரமூலம் கற்கடகச்சிங்கி குறாசாணிஓமம் மிளகுசீரகம்ஏலம்திப்பிலி அதிமதுரம் கோஷ்டம் திப்பிலிமூலம்வகைக்குப்பலம் அரை இவைகளையிடித்து வடிகட்டின சூரணத்தையும் தூவிக்கிண்டி வேளை ஒன்றுக்கு கொட்டைப்பாக்குப்பிரமாணஞ் சாப்பிட்டுவரபித்தவாயுஉஷ்ணம் சத்திகுன்மம் அரோசியம் விக்கல்அஸ்திசுரம் சன்னி அசீரணவாயு உப்பிசந்தீரும்.

## கண்டங்கத்திரிலேகியம்.

ஆழாக்கு ஆவின்நெய்யில் ரு-பலவெல்லத்தைப்போட்டுக்காச்சிக்கரைந்தபின் இறக்கி மேற்றோலைபோக்கிய பதினைந்துபலம் இஞ்சியை சிறுகஅறிந்து ஆவின்நெய்விட்டுச் சிவக்க வறுத்திடித்து வடிகட்டின சூரணத்துடன் திரிகடுகு சித்தரத்தை செவியம் மதுரம் சிறுதேக்கு வாய்விளங்கம் ஏலந்திரிபலைமல்லிசிறுநாகப்பூ தாளிசப்பத்திரி லவங்கப்பட்டை லவங்கப்பத்திரி நெற்பொரி வகைக்கு கழஞ்சு-௩ சாதிக்காய் சாதிப்பத்திரி கிராம்பு அதிவிடயம் வகைக்கு கழஞ்சு-௨ இவைகளை ரவியிலுலர்த்தியிடித்து வடிகட்டினதூளையும் ஒருபலச்சீனியையும் தூவிக்கிண்டி ஆறின் ஆழாக்கு தேன்விட்டுப் பிசைந்து வைத்துக்கொண்டு வேளைஒன்றுக்கு ஒருகொட்டைப்பாக்களவுகொள்ள புகைச்சல்இருமல் பித்தம்நெஞ்செரிவுவாந்தி தொண்டைக்கட்டு தலைநோய் குன்மம் வாட்சி மலசலக்கட்டு உட்சுரம் தாபசோபம் வயிற்றிரைச்சல் பொருமல் சீய் இரத்தம்வாயு அக்கினிமீந்தம் அபானவாயு கிராணி அதிசாரம் கழிச்சல்தீரும்.

இஞ்சி கண்டங்கத்திரி நெருஞ்சி முள்ளங்கி எலுமிச்சம்பழம் இவைகளின்சாறு வகைக்குப்படி-க ஆவின்பால்படி-௨ ஒன்றாய்க் கலந்து அதில் எட்டுபலக் கருப்புக்கட்டியைக் கரைத்துக் காய்ச்சி பாகுசெய்து திரிகடுகு சீரகம் ஏலம் வாய்விளங்கம் கிராம்பு தாளிசப்பத்திரிவகைக்குப்பலம்-க சூரணித்துத்தூவி அரைப்படி ஆவின் நெய்விட்டுக்கிண்டி மெழுகுபதத்திலாட்டி தேன்நெய்விட்டுப்பிசைந்து வேளைஒன்றுக்கு பாக்களவு மண்டலங்கொள்ள வாதபித்தம் வாந்தி சூலை இசிவு அரோசியம் அன்னத்துவேஷம் குன்மம்பொருமல் விக்கல் பித்தஎரிவு கசப்பு கபாலக்குத்து மயக்கந்தீரும் இதுகளெல்லா மிச்சாபத்தியம்.

## அஷ்டகுன்மலேகியம்.

தைவேளை பிரண்டை குப்பைமேனி இவைகளின்சாறுவகைக்குபபடி-க ஒன்றாய்க்கலந்து காய்ச்சிக் குழம்புபருவத்தில் கல்வத்திட்டு கரு-பலம்இலுப்பையபரைப்பைச் சுட்டகரியையும்திரிகடுகுஓமம் வகைக்குக்கழஞ்சு-க இவைகளையும் கூடப்போட்டு மெழுகுபோலரைத்து பின்பு ரு-பலம் பனைவெல்லத்தைசேர்த்து பிசைந்து தான்றிக்காய்போற் குளிகைசெய்து வேளைஒன்றுக்கு ஒருண்டை வீதஞ்சாப்பிட்டுவர அண்டவாதம் குன்மம் கெண்டை உப்பிசம் செறியாமை பெருவயிறு வாயுத்திரட்சி மலக்கட்டு வயரல்நீர் இரத்தம்வடிதல் சகலவாயுதீரும் பத்தியம் கைப்புப்புளிப்புத் தள்ளவும்.

## நாரத்தங்காய் லேகியம்.

நாரத்தம்பழம் இஞ்சி மூக்கரைச்சாரணைவேர் இவைகளின் சாறு வகைக்குபடி-ச ஒன்றாய்க்கலந்து ஐம்பது பலக் கருப்புக்கட்டியை கரைத்து காய்ச்சி பாகுசெய்து அதில்திரிகடுகு ஏலம் அதிமதுரம் தேசாவரம் கோஷ்டம் சிற்றரத்தை மல்லி தாளிசப்பத்திரி முந்திரிப்பழம் சாதிக்காய்சாதிப்பத்திரி கிராம்பு திரிபலைகுறாசாணி ஓமம் சந்தனம் கரியசீரகம் வகைக்குப்பலம்-அரை இவைகளை யிடித்து வடிகட்டின சூரணத்தையும் கரு-பலச் சீனியைத்தூவிஒருபடி நெய்யை விட்டுக்கிண்டி மெழுகுபதத்திலிறக்கி ஆற்றி இரண்டுபடி தேன்விட்டுப்பிசைந்து வேளைஒன்றுக்குஒருபுன்னைக்காய்வீதங்கொள்ள பித்தம் நெஞ்செரிவு அரோசியம் வாந்திதாபசுரம் வாதபித்தருட்சைகிருகிருப்பு வாயுதலைநோவு அக்கினிமந்தம் மலக்கட்டு காந்தல்தீரும் பத்தியம் புளிகசப்பு மோர்நீக்கவும்.

## சிவதைலேகியம்.

பாலில் அவித்துச் சுத்திசெய்திடித்து வடிகட்டினசிவதை சூரணம் வகைக்கு விராகனிடை-கரு(ய) முத்தக்காசு சூரணம் விராகனிடை-கூ திரிகடுகு திரிபலை கண்டதிப்பிலி இந்துப்பு ஓமம் கடுரோகணிவாய்விளங்கம் அதிவிடயம்மாசக்காய் இவைகளின்சூரணம வகைக்குகழஞ்சு-க ஒன்றாய்க்கலந்து ஒருபடி சிற்றாமணக்கெண்ணெயில் ரு-பலச் சர்க்கரையைப் போட்டுக் காய்ச்சிக் கரைந்தபின்கீழேயிறக்கி அதில் மேற்சூரணத்தைத் தூவிக்கிண்டி ஒருகொட்டைப்பாக்குப் பிரமாணம் பத்தியமாய் சாப்பிட்டுவர வயிற்றுவலி வாதம் குன்மம் அக்கினிமாந்தம் கிருமிபாண்டு தலையிருதிர்தல் பித்தம் அரோசியம் கிருச்சனம் ஆனந்தவாயு அண்டவாயு மகோதரம்சூலை வாதம் மலக்கட்டுகுதிங்காற்குத்து விரற்சொத்தை தேகத்தில்வரும் கறுப்பு எரிவுதீரும்.



### பஞ்சதீபாக்கினிலேகியம்

திரிகடுகு ஏலம் சீரகம் வகைக்குபலம்-க வெதுப்பி பொடித்து இரண்டுபடி ஆவின்பாலில் எட்டுபலக்கருப்புக்கட்டியை கரைத்தெடுத்துபாகுசெய்து அதில்சூரணத்தைதூவி நெய்படிஅரைக்கால்விட்டுக்கிண்டி மெழுகுபதத்தில்ஆற்றி தேன்படிமாகாணி விட்டுப்பிசைந்து வைத்துக்கொண்டு வேளைஒன்றுக்கு கொட்டைப்பாக்குபிரமாணஞ்சாப்பிட்டுவரவாயுவாதம் ஊஷ்ணம்பித்தவாயுசரீரத்தில்உளைவு குத்துவலி கடுப்பு எரிச்சல் பேதி பொருமல் வாயுகிராணிதீரும்.

### முடக்கொத்தான்லேகியம்.

காற்படி விளக்கெண்ணெயில் முடக்கொத்தானிலைபிடி நாலுக முற்சி விரைபருப்புமூக்கரைச்சாரணைவேர்-ச திரிகடுகுதிரிபலைவகைக்குபலம்-க கருப்புக்கட்டி பலம்-ங இவைகளை மயனமாய் பொடித்து அரைத்துபோட்டு மெழுகுபதமாய்கிண்டி கொட்டைப்பாக்களவுகொள்ள வெட்டைவெள்ளை புண்கள்மேலெரிவு முடக்குசொரிவங்குவயிற்றுவலி கண்புகைச்சல் மேகசூலைமார்புக்குத்து மாரடைப்பு நீர்க்குத்து அண்டவாதம் உட்காந்தல் மலக்கட்டுத்தீரும்.

### சண்டமாருதலேகியம்.

கண்டங்காரிதூதுவேளைமிளகு தக்காளிசங்கிலை ஆடாதோடை துளசியிலை வகைக்குசாறுபடி-வ ஒன்றாய்க்கலந்து அதில் ரு-பலக் கருப்புக்கட்டியைக் கரைத்துப்பாகுசெய்து திப்பிலி அரத்தைசுக்கு வகைக்குக்கழஞ்சு-ம இடித்துச் சூரணஞ்செய்து தூவி மாகாணிபடி நெய்விட்டுக்கிண்டி மெழுகுபதத்தி லிறக்கி ஆற்றி அரைக்காற்படி தேன்விட்டுப் பிசைந்துக்கொண்டு தான்றிக்காய்பிரமாணம் பத்தியமாய்க்கொள்ள சகலஇருமலுந்தீரும்.

### மிக்குளாந்தகலேகியம்.

பாங்கிப்பட்டைவால்மிளகு தாளிசபத்திரி லவங்கம் சடாமாஞ்சில் சந்தனம் வெட்டிவேர் ஏலம்மிளகு தாமரைக்கிழங்கு நிலப்பனைக்கிழங்கு சீரகம் கருஞ்சீரகம் அதிமதுரம் சீந்திற்சர்க்கரைவகைக்குப்பலம்-ரு லவங்கப்பட்டை வகைக்குப்பலம்-ரு லவங்கப்பத்திரி பலம்-உ சாதிப்பத்திரிபலம்-வ கூகைநீர் பலம்-வ இவைகளையிடித்துத் தூள்செய்து நாலுபலம் இஞ்சிச்சாற்றில் ருஉ-பலச் சர்க்கரையைப்பாகுசெய்து சூரணத்தைத்தூவிக்கிண்டி மெழுகுபதத்திலிறக்கி ஆற்றிப் ம-பலம் தேன்விட்டுப்பிசைந்துகொண்டு வேளைஒன்றுக்குக் கொட்டைபாக்குபிரமாணஞ் சாப்பிட்டுவர மேககாங்கை பித்தகாங்கை தீரும்.

### கலிங்காதிலேகியம்.

விளக்கெண்ணெ தேங்காய்ப்பால் பேய்குமட்டிகாய்சாறுவகைக்குபடி அரை ஒன்றாய்க்கலந்து அதில் சத்திசாரம் நவாச்சாரம்பஞ்

சலவணம் பெருங்காயம் வாய்விளங்கம் கருஞ்சீரகம் கிராம்பு அத்தை ஆனைத்திப்பிலி திப்பிலிமூலம் அமுக்குறாக்கிழங்கு சதகுப்பை நெல்லிபருப்புமல்லிபொன்முசுட்டைவேர்வகைக்குகழஞ்சு-டு ஓமம் பலமறை சித்திரமூலம்வெந்தயம் வகைக்குபலம்-க வெள்ளைப்பூண்டு பலம்-உ வெல்லம்பலம்-ச கடுக்காய்-உய தான்றிக்காய்-ய இவைகளையிடித்துச் சூரணித்துத் தூவிக்கிண்டி லேகியஞ்செய்துவேளைஒன்றுக்கு கொட்டைப்பாக்கு பிரமாணஞ் சாப்பிட்டுவர வாயுசூலை வாயுத்திரட்சி கெண்டைமுதலான உதரரோகங்கள் தீரும்.

## தூதுளைலேகியம்.

முருங்கைப்பூ தூதுளம்பூ வகைக்குப் பலம்-க இவைகளை சூரணித்துக் குறுணி ஆவின்பாலிற் போட்டுக்காய்ச்சிக் குறுகிவரும்போது பன்னிரண்டுபலச் சீனியைபோட்டு நெய்படி-வ தேன்படி-வ விட்டுக்கிண்டி தான்றிக்காய்பிரமாணங்கொள்ள பிரமியம்மேகம் எலும்புருக்கி பிரமேகந்தீர்ந்து திரேகம்பலக்கும்.

## சித்தாதிலேகியம்.

ஆறுமாசக்காடி புளித்தமோர் வகைக்குபடி-ய அதில்இடித்த புளியிலை ஒருதுக்கு துருப்பிடித்த இரும்பு ஓரிடைபோட்டுக்காச்சி எட்டொன்றாய் வற்றவைத்துவடித்துக் கையாந்தகரைச் சாறுபடி-உ இஞ்சி எலுமிச்சம்பழம் நெருஞ்சி சிறுகீரை செருப்படை தென்னம்பூ கீழ்க்காய்நெல்லி இவைகளின்சாறு வகைக்குபடி-க ஆவின்பால்படி ஒன்றாய்க்கலந்து அதில் பி-பலம் கருப்புக்கட்டியைக் கரைத்து பாகுசெய்து திரிகடுகு ஓமம் திரிபலை கோஷ்டம் மாஞ்சில்சீரகம்வால்மிளகு ஓமம்கிராம்புதாளிசபத்திரி லவங்கப்பட்டை ஆனைத்திப்பிலிவகைக்குப்பலம்-க இவைகளை வெதுப்பிச்சூரணஞ்செய்து தூவி ஒருபடி ஆவிநெய்விட்டுகிண்டி மெழுகுபதத்திலிறக்கி ஆற்றி ஒருபடிதேன்விட்டுப்பிசைந்து வைத்துக்கொண்டு வேளைஒன்றுக்கு கொட்டைப்பாக்குபிரமாணம் மண்டலஞ் சாப்பிட்டுவரபாண்டுபித்தவெட்டை வாயு அக்கினிமந்தம் பொருமல் உடம்பிளைப்பு வெளுப்பு சோகை கிராணிநீங்கும்.

## சித்திரவல்லாதிலேகியம்.

சித்திரமூலம்வெள்ளறுகு சிவனார்வேம்பு சங்குசங்கங்குப்பிகொல்லங்கோவை அமுக்குறா வெள்ளெருக்கு சின்னிவிளாத்து குமிழ் மிளகரணை செங்கத்தாரி குன்றி பிரப்பங்கிழங்கு பூதவிருட்சம்வாதகரப்பன் இவைகளின்மூலப்பட்டை முற்றினதேங்காய் நீர்வெட்டிமுத்து வெட்பாலையரிசி கரியசீரகம் காட்டுச்சீரகம் கெந்தகம்துருக்கச்செந்தூரம்குஷ்டம் துத்தம் வகைக்குப்பலம்-க பனைவெல்லம் காரெள்ளு வகைக்கு ஒருசேர்சுத்திசெய்தசேங்கொட்டை-ா பரங்கிப்பட்டை பலம்-உ இவையெல்லாம்மெழுகுபோலிடித்துவேளைஒன்றுக்கு.

கொட்டைபாக்கு பிரமாணம்மண்டலங்கொள்ளசூலைகிரந்திமுடக்கு கடுப்பு மேகவாதம் மேகஊறல்வெளுப்பு சொரிசிரங்கு புழுவெட்டு கடிவிஷம் திமிர்குஷ்டம் கண்டமாலை புற்று பிளவைமுதலசன ரணங்கள்தீரும்,

தாதுபுஷ்டிலேகியம்.

இரண்டுபடி பனைப்பதினியில் நாலுபலக் கருப்புக்கட்டியைக் கரைத்து பாகுசெய்து அதில்தேங்காய்பால் இளநீர் கருப்பஞ்சாறு ஆவின்பால்நெய்வகைக்குப்படி-க ஒன்றாய்க்கலந்துகாய்ச்சிநெய்யை வடித்துவிட்டு ஆல்நாயுருவி பருத்தி ஆவரைமுருங்கை பூனைக்காலி இவைகளின்வித்து அமிர்தசர்க்கரை, கிறாம்புசாதிக்காய்சாதிபத்திரி ஏலம்மிளகு லவங்கபத்திரி குறாசாணிஓமம் கோஷ்டம் சடாமாஞ்சில் வாலுளுவையரிசி சிறுநாகப்பூ குங்குமப்பூதிரிகடுகு திரிபலைதாளிசபத்திரி சீரகம் வெந்தயம்நிலப்பனைக்கிழங்கு பூமிசருக்கரைகிழங்கு வெட்டிவேர் விலாமிச்சுவேர், முந்திரிப்பழம் பேரீச்சம்பழம் சாரபருப்பு ஓமம் கசகசா வகைக்கு விராகனிடை-ரு சுத்திசெய்த கெஞ்சா விராகனிடை-கரு இவைகளை யிடித்துச் சூரணஞ்செய்து தூவிகிண்டி மெழுகுபதத்திலிறக்கி ஆற்றித்தேன்படிமாகாணி அவித்தகோழி முட்டைகரு-டு சர்க்கரைபலம்-டு இவைகளை சேர்த்து பிசைந்துகொண்டு வேளையொன்றுக்குச் சுண்டைக்காய்பிரமாணம் சாப்பிட்டுவர மேகம்அதிசாரம் வீரியவிர்த்தியும் தேககாந்தியுமுண்டாகும்.

பத்துபலச்சீனியை இரண்டுபடி ஆவின்பாலிற்கரைத்து பாகு செய்து அதில்ஏலம் அதிமதுரம்சுக்கு லவங்கப்பட்டை கோஷ்டம் வால்மிளகு சிற்றரத்தை குறாசாணிஓமம் ஓமம் தாளிசப்பத்திரிசாதிக்காய் சாதிபத்திரி சடாமாஞ்சில் சாரப்பருப்பு பர்ப்படகம் லவங்கப்பத்திரி சீரகம் திப்பிலிகிறாம்பு மதனப்பூ அபின் வாலுளுவை ரூமிமஸ்தகி மகரபபூ வெட்டிவேர் சோரோசனை நறுக்குமூலம்பூனைக்காலிவிரை, வெள்ளைக்குங்கிலியம் இருவேலி கூகைநீர் அதிவிடயம் அக்கிராகாரம் கச்சோலம் சாலாமிசிரிவகைக்குவிராகனிடை-டு வெதுப்பி இடித்து வடிகட்டின சூரணத்துடன் பாலிலவித்துச் சுத்திசெய்து உலர்த்திஒன்பது புடஞ்செய்த கஞ்சாத்தூள் விராகனிடை டு இவைகளைஒன்றாய்கலந்துதுவி நெய்படி-வ விட்டுக்கிண்டி மெழுகுபதத்திலிறக்கி ஆற்றித்தேன்விட்டுபிசைந்து வேளைஒன்றுக்குஒரு கழற்காய் பிரமாணஞ் சாப்பிட்டுவரத் தாதுவிர்த்திக்கும்.

வில்வவேர் விலாமிச்சுவேர் நன்னாரிவகைக்குதுலா-வ நறுக்கித் தூணிநீரிற்போட்டுவற்றவைத்த கியாழம்படி நாலில்பத்துப்பலச்சீனி

யைக் கரைத்துப் பாகுசெய்து அதில்திரிகடுகு ஓமம் அதிமதுரங் கிராம்பு அபின்வால்மிளகு சீரகம் வாலுளுவையரிசி சாதிக்காசாதி பத்திரிசன்னலலவங்கப்பட்டை லவங்கப்பத்திரி மகரப்பூசிறுநாகப்பூ சடாமாஞ்சில் சாரபருப்பு நெல்லிபருப்பு கசகசா சுத்திசெய்த கெஞ்சா வகைக்கு விராகனிடை-ரு வெதுப்பி பொடித்துப் போட்டு ஆவின்நெய்படி-வ விட்டுக்கிண்டி மெழுகுபதத்தில் தேன்படி அரைக்கால் விட்டுப்பிசைந்து வேளைஒன்றுக்குக் கொட்டைப்பாக்கு பிரமாணஞ் சாப்பிட்டுவர வயிற்றுளைவு சலக்கழிச்சல் கைகாலெரிவு உழைமாந்தம் வாதம்-அய் திமிர்வாதம் பித்தம் குன்மம் விஷபாக் விஷபாகவீக்கந்தீரும் தாதுபுஷ்டியுண்டாகும்.

இரண்டுபடி ஆவின்பாலிற் பத்துபலச்சீனியை கரைத்து பாகுசெய்து அதிற்பத்து அண்டத்தையுடைத்துவிட்டுத் திரிகடுகுசாரப் பருப்பு கசகசா கிராம்புஏலம் சாதிக்காய் சாதிபத்திரி அதிமதுரம் கூகைநீர் கோஷ்டம் சடாமாஞ்சில் சன்னலவங்கப்பட்டைச் சுத்திசெய்த கெஞ்சாவகைக்குப்பலம்-க இவைகளைச்சூரணித்து போட்டு ஆவின்நெய்படி-வ விட்டுக்கிண்டி மெழுகு பதத்திலிறக்கி தேன்படி அரைக்கால்விட்டு பிசைந்துவைத்துக்கொண்டு வேளையொன்றுக்கு புன்னைக்காய்பிரமாணஞ் சாப்பிட்டுவர தாதுவிர்த்தியாகும்.

தாதுவேளைசமூலம் வில்வவேர் அமுக்குறாக்கிழங்கு சந்தனப் பொடி அறுகவேர் சீந்திற்கொடிவகைக்குபலம்-ரு இடித்துப்பனிரண்டுபடி சலத்திற்போட்டு காய்ச்சி வற்றவைத்த கியாழம் ஆவின் பால் வகைக்குப்படி-உ ஒன்றாய்க்கலந்து அஞ்சுபலச் சர்க்கரையும் மூன்றுபலக் கருப்புக்கட்டியையுங் கரைத்து பாகுசெய்து அதில் திரிகடுகுகிராம்புசாதிக்காய்சாதிபத்திரி சடாமாஞ்சில்நெல்லிவற்றல் அதிமதுரம்ஏலம் நற்சீரகம் லவங்கம் லவங்கப்பட்டை அபின் சிறுநாகப்பூ கசகசா தாளிசபத்திரி ஓமம்வால்மிளகுசிற்றரத்தை அக்கிராகாரம் கோஷ்டம் சுத்திசெய்த கஞ்சாவகைக்கு விராகனிடை-ரு இவைகளைவெதுப்பிச் சூரணித்துப்போட்டு அரைபடி ஆவின்நெய் விட்டுக்கிண்டி மெழுகுபதத்திலிறக்கி ஆற்றித் தேன்படி-வ விட்டுப் பிசைந்துகொண்டு வேளைஒன்றுக்குத் தேற்றுவிரைப் பிரமாணஞ் சாப்பிட்டுவர தாதுவிர்த்திக்கும்பிரமேகம்கிராணி அதிசாரம் வாயு பெரும்பாடு எரிகுன்மந்தீரும்.

ஒருபடி ஆவின்பாலில் பத்துபலச்சீனியைக் கரைத்துப் பாகுசெய்து திரிசாதம் சீரகம்ஓமம்ஏலம் அபின் திரிகடுகுஉளுந்து அதிமதுரம் முத்தக்காசு நெல்லிமுள்ளி அசுவகெந்திக் கிழங்கு பூனைக்காலிவிதை இலவம்பிசின் வாய்விளங்கம் லவங்கம் நிலப்பனைகிழங்கு நெரிஞ்சிவேர் கசகசா சுத்திசெய்த கஞ்சா வகைக்குக் கழஞ்சு-கஉ இவைகளையிடித்துச் சூரணித்துப்போட்டுநெய்படி-வ விட்டுக்கிண்டி

மெழுகுபதத்திலிறக்கி தேன்படி அரைக்கால்விட்டுப் பிசைந்து வேளை ஒன்றுக்குத் தேற்றுவிரைப் பிரமாணஞ் சாப்பிட்டுவர தாதுவிர்த்தியுண்டாகும்.

மதனகாமேசுரலேகியம்

இரண்டுபடி ஆவின்பாலில் பத்துபலச் சீனியைக் கரைத்துப் பாகுசெய்து திரிகடுகு அதிமதுரம் சிறுதேக்கு நீர்முள்ளிவித்து நெருஞ்சிவேர் மல்லிகோஷ்டம் சாதிக்காய் உளுந்து எள்ளு முந்திரிபழம் ஏலம் முள்ளிலவம்பிசின் இந்துப்பு அதிவிடயம் கஸ்தூரிமஞ்சள் கதலிக்கிழங்கு சாரணைக்கிழங்கு தண்ணீர்விட்டான் கரிப்பான் சமூலம் கொடிவேலிவேர் ஆனைத்திப்பிலி மருட்கிழங்குசிறுநாகப்பூ வெந்தயம் அபின் அப்பிரகசெந்தூரம் திரிபலை லவங்கம் சண்பகவித்து நற்சீரகம் சுத்திசெய்தகஞ்சா பெருஞ்சீரகம் நிலப்பனைக்கிழங்கு லவங்கப்பட்டை வகைக்குபலங்கால் இவைகளையிடித்து சூரணித்து அதற்குநிகர் பூனைக்காலிவித்து பருப்பின்மாவு சேர்த்துப் போட்டு நெய்விட்டுக்கிண்டி மெழுகுபதத்திலிறக்கி ஆற்றிதேன்விட்டுபிசைந்து வேளை ஒன்றுக்குத் தேற்றுவிரை பிரமாணம் சாப்பிட்டுவர வீரியவிர்த்தியுண்டாகும் இந்திரியங்கட்டும் அதிசாரம் கிராணி பித்தம் சிலேத்மம் வாயுதீரும் புளிநல்லெண்ணை கடுகுநீக்கி ஆவின்பால்நெய் முருங்கைபிஞ்சி கூட்டி பத்தியங்கொள்ளவும்.

வில்வம் தூதுவேளை கண்டங்கத்திரி சிறுவழுதலை சிற்றுமுட்டி நொச்சி முக்காவேளை நன்னாரி சங்கங்குப்பி காட்டுமல்லிகை சீதேவியார் செங்கழுநீர் பொன்முசுட்டை இம்பூரல் அமுக்குறா ஓரிலைத்தாமரை சிறுகீரை பொன்னாங்காணி வேலிபருத்திகாட்டாமணக்கு சின்னி இவைகளின்மூலம் வகைக்குபலம்-ய இடித்துப்போட்டு-ரு மரக்கால் தண்ணீர்விட்டுஎட்டொன்றாய் வற்றவைத்துவடித்து அதில் கரிப்பான் பொடுதலை பிரமி முசுமுசுக்கை முடக்கொத்தான் சங்கிலை நிலவாகை ஆடாதோடை புளியிலை பழம்பாசி சங்கங்குப்பி பொற்றலைக்கரிப்பான் மாதுளம்பழம் பெரும்பூசனி எலுமிச்சம்பழம் இஞ்சி இவைகளின்சாறு வகைக்குப்படி-வ ஒன்றாய்க் கலந்து உய-பலம் சீனியைக்கரைத்து பாகுசெய்து மிளகு ஓமம் வெள்ளைப்பூண்டுகடுக்காய் தான்றிக்காய் கோஷ்டம் அக்கிராகாரம் கடுகுரோகணி அரத்தை திப்பிலிசெவியம் கருஞ்சீரகம் தேசாவரம்வகைக்கு பலம்-க கத்தரிமஞ்சள் தேவதாரம் இந்துப்பு கல்லுப்பு பொட்டிலுப்பு வளையலுப்பு சடைக்கஞ்சா குருசாணிஓமம் கசகசா சாரப்பருப்பு அபின்வாய்விளங்கம் மல்லிசீரகம் சுக்கு அதிமதுரம் ஏலம் லவங்கபட்டை தாளிசபத்திரி வகைக்கு விராகனிடை-ரு சாதிபத்திரி விராகனிடை-க சாதிக்காய் கிறும்பு வகைக்கு விராகனிடை-உ இவைகளையிடித்து சூரணித்துப்போட்டு நெய்படி-க விட்டுக்கிண்டி

மெழுகுபதத்திலிறக்கி தேன்படி-௨ முந்திரிப்பழம் வகைக்குப்பல ம்-௩ சேர்த்துப்பிசைந்து வேளைஒன்றுக்குக் கொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவர சகலவியாதியுந் தீரும் தாதுபுஷ்டியுமுண் டாகும்.

மதனகாமேசுரகுளிகை

வாலேரசங்கழஞ்சு-௩ லிங்கம்கழஞ்சு-௧ முருங்கைவித்துசாதிக் காய்முத்தக்காசு கிராம்பு அபின்கஞ்சா பூனைக்காலிவித்து பூமிச்சர் க்கரைக்கிழங்கு கிலப்பனைக்கிழங்கு சமுத்திரா சேர்கிவிதை சாதிப் பத்திரி சாரப்பருப்பு வெங்காரம் வகைக்குபலமரை இவைகளைப் பொடித்துமுற்றினதேங்காய்க்குள் அடைத்துமூடிச் சாணியிற்பொ திந்து காயவைத்து சிரட்டைகரும்படி புடம்போட்டு ஆறவிட்டெடு த்துச் சிரட்டைநீக்கி மெழுகுபோலரைத்துத் தேற்றுவிதைப்பிரமா ணம் உருட்டி சருக்கரையிற்பொதிந்து சாப்பிட்டு பாலும் அன்ன முங்கொள்ளத் தாதுபுஷ்டிக்கும் கட்டும் புணர்ந்தாற் கலிதமாகாது அதற்குமாற்று எலுமிச்சம்பழம்

சிறுபூனைக்காலி நத்தச்சூரி நீர்முள்ளி முருங்கை அமுக்குரா செம்முள்ளிநெரிஞ்சி ஊமத்துஒரிலைத்தாமரை கஞ்சா ஆவரைமுள் ளிசங்கு முசுமுசுக்கை அழிஞ்சில்வம் நெல்லி அத்தி ஆத்தி அரசு ஆல்அவிரி பரசு முசுட்டைதிரிபலை கருவேல் வன்னி மருது மாங் கொட்டை அகத்திதேற்று சிவனவேம்பு செந்நாயுருவி பாற்கொரா ண்டி இவைகளின்வித்து கிலப்பனைக்கிழங்கு நன்னாரிவேர் சமுத்தி ரப்பழம் வாகைமுருங்கை விளாவேலா வேம்பு இலவுஇவைகளின் பிசின் சாதிக்காய் சாதிப்பத்திரி குறுசாணிஓமம்அமிர்தசர்க்கரை கற்கண்டு வெள்ளைக்குங்கிலியம் மதனப்பூ அப்பிரகசெந்தூரம் வகை க்குக்கழஞ்சு-௧ இவைகளைமுந்திரிப்பழச் சாற்றால் நாற்பதுநாழிகை யரைத்து கடலைபிரமாணம உருட்டி வேளைஒன்றுக்கு ஒருகுளிகை வீதம் ஆவின்பாலி லொருமண்டலம் கைப்பு புளிப்பு நீக்கி உட்கொ ள்ள யானைபலமுண்டாகும் தாதுவிர்த்திக்கும் விந்துகட்டும்.

தேய்ங்க உருக்குளிகை லேசாய்ந்தட்டிக் காய்ச்சி வாழைக் கிழங்குச்சாற்றில் தோய்த்து நொரிக்கிபொடித்து அதுநனைத்தக்க பட்டைக காயைப்பொடித்து அதில் வருகிறபாலைவிட்டு உலர்த்தி கல்வத்தி மிராய் மரபாலால் மெழுகுபோ லரைத்துக் குன்றிபோ லுண்டைசெய்து வேளைஒன்றுக்கு ஒருண்டைவீதம் ஆவின்பாலிற் கொள்ள தேகம் பலக்கும் வீரியவிர்த்தியுண்டாகும்.

அபின் மதனப்பூ கிராம்பு சாதிக்காய் மராட்டிமொக்கு தங்க பற்பம் சாம்பிராணிப்பூ முருங்கை ஆல் அரசு அத்தி இவைகளின்

வித்து அதிமதுரம் இவைகளை ஓர்நிறையாய் முருங்கைப்பூச்சாற்று லாட்டிச் சுண்டைக்காயளவு உண்டைசெய்து ஆவின்பாலில் முருங் கைபூவை போட்டுக் காய்ச்சிவடித்து அதில் ஒருண்டை யுரைத்து ஒருமண்டலம் புளிஉப்புநீக்கி பத்தியம்பாலும் அன்னமுங்கொள்ள தேகம்பலத்து தாதுகட்டும்.

அமுக்குறாக்கிழங்குநீர்முள்ளிவித்து குருந்தொட்டிவேர்இவை களை ஓர்நிறைப்பாய்பொடித்து திரிகடியளவு ஆவின் வெண்ணெயில் மத்தித்து உண்டுவர தாதுவிர்த்தியாகும்.

சாதிக்காய் அதிமதிரம் கஸ்தூரிமஞ்சள் குங்குமப்பூ லவங்கப் பட்டை முருங்கைவித்து பூனைக்காலிவித்து அமுக்குறாக் கிழங்கு கோஷ்டம் அக்கிராகாரம் கசகசா ஓமம் குறாசாணிஓமம் சமுத்தி றாசோகிவிரை இவைகளை ஓர்நிறைபாய்ச் சூரணித்து அதற்குநிகர் கஞ்சாசூரணஞ்சேர்த்து தேன்விட்டு மூன்றுநாளாட்டி துதுவேள ங்காயளவுசாப்பிட வீரியவிர்த்தியாகும்.

முத்துவிராகனிடை-உ தங்கம் விராகனிடை-வ பவளம்விராக னிடை-க முருங்கைவித்து ஆவரைவித்து மகிழம்வித்து நெருஞ்சி வித்து நீர்முள்ளிவித்து பருத்திவிரைப்பருப்பு சாதிக்காய் சாதிப்ப த்திரிகிறும்பு வகைக்குவிராகனிடை-ரு அபின்விராகனிடை-உ இவை களைதேன்விட்டரைத்துச் சுண்டைக்காயளவு சாப்பிட்டு ஆவின்பா லில் முருங்கைப்பூவை போட்டுக் காய்ச்சி சாப்பிட்டு புணர தாது கட்டும்.

மூன்றுமுட்டை மஞ்சட்கரு அபின் அக்கிராகாரம் நிலப்பனை க்கிழங்கு சர்க்கரை இவைகளை ஓர்நிறைபாய்த் தேன்விட்டரைத்து சுண்டைக்காயளவு சாப்பிட்டு முன்போல் ஆவின்பாலைக் குடித்து புணர தாதுகட்டும்.

மதனகாமேசுரநெய்.

திரிகடுகு சிறுநாகப்பூ கிராம்புசாதிபத்திரி வால்மிளகு சீரகம் தக்கோலம் வகைக்குகழஞ்சு-ச கோரக்கர்மூலி அபின்வகைக்குகழ ஞ்சு-ரு இவைகளை ஆவின்பாலிலரைத்து முக்காற்படி நெய்யில் வே கவைத்து நெய்யைவடித்து ஒருகரண்டி சாப்பிட்டு புளித்தள்ளி பாலும் அன்னமும் பொசித்து புணர்ந்தால் இந்திரியங் கலிதமா காது.

மதனபூரணவல்லாதி.

எள்ளு பூமிசர்க்கரைக் கிழங்கு சுத்திசெய்த சேங்கொட்டை வகைக்குபலம்-உ அமுக்குறாக்கிழங்கு பலம்-க நாயுருவி நத்தைச் சூரி பாற்குரண்டி கஞ்சா துளசி அரசு அத்தி ஆல் முருங்கை நீர் முள்ளி பூனைக்காலி. ஆவரை திருநீற்றுபச்சை கருவேல் சிறுகீரை

பொன்னாவரை தேற்றா இவைகளின்வித்து வகைக்குக்கழஞ்சு-உ திரிகடுகுசாதிக்காய்கிராம்பு சாதிபத்திரி சோம்பு கருவாப்பட்டை சாரபருப்பு வால்மிளகு மதனப்பூ சிறுநாகப்பூ அபின்கசகசாஏலம் ஓமம்வாலுளுவையரிசிகோஷ்டம்வகைக்குபலம்-௧சுத்திசெய்தவறுத்தகஞ்சாபலம்-ச இவைகளைக்கல்லுரலில்நாலுசாமம்யிடித்துச்சீனிபலம்-ரு கற்கண்டுபலம்-உரு சேர்த்துகொண்டு வேளை ஒன்றுக்கு அரைவிராகனிடை வீதம் பாலிற்கொள்ள விந்துகட்டும் மயக்கினால் எலுமிச்சம்பழச்சாறும் ஈருள்ளிச்சாறும் கொடுக்கமாறும்.

மதனசஞ்சீவி.

ஒருபடி ஆவின்பாலில் நாலுபலக் கோதுமைமாவையும் உ௰-பலச்சீனியையும் போட்டுக்கிண்டிக் காய்ச்சிபாகுபதத்தில் நீர்முள்ளிவிரை நிலப்பனைக்கிழங்கு லவங்கப்பட்டை பனைவேர் வகைக்குப் பலம்-ச கருவேலன்பிசின் கஞ்சா வகைக்குபலம்-உ சந்தனம் சாதிக்காய் கிறாம்பு பெருஞ்சீரகம் வகைக்குவிராகனிடை-உ திப்பிலிபலம்-அரை இவைகளையிடித்துச் சூரணித்துப்போட்டு நெய்படி-அரை விட்டுக்கிண்டி மெழுகுபதத்தில் இறக்கி ஆற்றி பேரிச்சம்பழம் பலம்-ச தேன்பலம்-௰ சேர்த்து பிசைந்து வேளைஒன்றுக்குகொட்டைப்பாக்கு பிரமாணஞ் சாப்பிட்டுவர விந்துறும் போசமிகும்.

மதனப்பால்.

சந்தனம் தேற்றாவிரை முருங்கைவேர்ப்பட்டை இவைகளைஓர் நிதையாய்த் தேங்காய்ப்பாலிலரைத்து உட்கொள்ள விந்து கட்டும் புளித்தள்ளவும்.

பூனைக்கால் நிலப்பனைக்கிழங்கு பூமிசர்க்கரைகிழங்கு இம்மூன்றையும் ஆவின்பாலிலாவது சல்லத்திப்பாலிலாவது அரைத்துண்டாலும் வீழிக்கிழங்கையும் பூமிசர்க்கரைக் கிழங்கையும் ஆவின் பாலிலரைத்துண்டாலும் சிராசெங்கழுநீர் குரட்டைவேர் இவைகளை ஓர் நிறையாய் பாலிலரைத்துக் கொண்டாலும்தாதுவிர்த்தியுண்டாகும் நீர்முள்ளி முருங்கை முசுட்டை பாற்சுரண்டி இவைகளின் வித்து கசகசாவகைக்கு விராகனிடை-ரு இவைகளை பொடித்து வடிகட்டி ஒருபடி ஆவின்பாலிற்போட்டுச் சிறுதீயாயெரித்து அரைக்காற்படியாய் வற்றவைத்துச் சீனிகலந்து இந்தப்படி பத்துநாட் கொள்ள லேபனமுண்டாகும் ஆவின்பாலில் நெருஞ்சி பூவையும் முருங்கைப் பூவையும் போட்டுக் காய்ச்சி காலையிலும்மாலையிலும் சாப்பிட்டுவர தாதுவிர்த்திக்கும்.

சிவந்த ஆவின்பால்படி ஒன்றில் அறுபது வெள்ளறுக்கம்பூவை போட்டுக்காய்ச்சி பூக்குழைந்தபின்பு எடுத்துபோட்டுஎன்றும்

போடவும் இந்தப்படி ஷை சாற்றுலாட்டி மூன்றுபுடம் போட்டு ஆவின்வெண்ணெயால் கொள்ள மேலெரிவு பித்தவெட்டை நீர்க் கடுப்புநீங்கும்.

ஷை பத்திடை சுத்திசெய்த வெங்காரஞ்சேர்த்து சிறுநீரலரைட்டி வில்லைசெய்து காயவைத்து ஒட்டிலிட்டு சீலைசெய்து ஒருஎருவில் புடம்போட்டு வெண்ணெயிற்கொடுக்க நீர்க்கட்டு நீர்க்கடுப்பு தீரும்.

வெள்ளரிவிரை விராத்தலைக்கல் ஷை பஸ்பம் இவைகளை யரைத்து வ-படி வெள்ளரிக்காய் சாற்றிலொருவேளையும் முள்ளங்கியை யிடித்துபிழிந்த சாற்றிலொருவேளையுங் கொடுக்க கல்லடைப்புத் தீரும்

வெங்காரம் சலாசத்து கலற்கொம்பு கல்நார் இவைகளை ஒர்நிறைபாய் கல்வத்திட்டு பருத்திச்செடிசமூலஞ் சுட்டசாம்பல் படி-சு நாலுபடி சலத்தில்போட்டு கலக்கி நாலாநாள்தெளிவிறுத்து அந்த தெளிவினால் நாலுசாமமரைத்து வில்லைதட்டிக் காயவைத்து ஒட்டிலிட்டுச் சீலைசெய்து முப்பதெருவில் புடம்போட்டு அதில் சாரஞ்சூடன் பூநீர்வீரம் வகைக்கொரு கழஞ்சுசேர்த்து ஷை நீரால்நாலுசாமமாட்டி வில்லைசெய்து காயவைத்து சுண்ணாம்புப் பொடிக்குள்வைத்து முழுப்புடம்போட நீறும் கறுத்திருந்தால் அண்டவெள்ளைக் கருவினாலரைத்து ஒருபுடம்போட வெளுத்தநீறும் அதற்குப்பாதி சுத்திசெய்த லிங்கஞ்சேர்த்துப் பொடித்து இரண்டுபணவிடை இளநீரிற்கொள்ள பெருவயிறு மகோதரம் கிருச்சனம் கல்லடைப்பு சதையடைப்பு நீர்ச்சிறுப்பு நீரெரிவு நீர்ச்சுரப்பு நீர்கட்டுத்தீரும்.

## சொர்னபஸ்பம்.

தங்கரேக்கை முள்ளிக்கீரைச்சாற்றில் மூன்றுநாளூறவைத்து ரவியில் காயவைத்து கல்வத்திட்டு சித்திரப்பாலாடைச்சாற்றில்மை போலரைத்து வில்லைதட்டி காயவைத்து அதற்கு சவம்பிலையை அரைத்துக் கவசஞ்செய்து அகலில்வைத்து ஏழுசீலை மண்செய்து நூறெருவில் புடம்போடப் பஸ்பமாகும் கவுரியிலைக்சாறுபடி-அ சிறுகச்சிறுக ஒருசட்டியிட்டுக் காயவைக்குத்திரட்டி நிறுத்தி அந்த யிடை ஆடாதோடையிலையும் ஒருபலப்புனுகு இரண்டுகழஞ்சுஷை பஸ்பமும்சேர்த்து மெழுகுபோலரைத்து நெல்லிக்காய் போலுருட்டி எள்ளெண்ணெயில் போட்டு அந்திசந்தி ஒவ்வொரு உண்டைவிதம் ஆறுமாதஞ்சாப்பிட்டு ஷை எண்ணெயை வாரத்துக்கிரண்டுமுறை ஸ்நானஞ்செய்து சையோகமும் காப்பன்பதார்த்தமுந் தள்ளிவைக்க வெண்குட்ட முதலான சகலகுட்டமுந்தீரும்.

கிராம்பை மயனமாய்ப்பொடித்து ஆவின்நெய்யில் மத்தித்து அதிற் பணவிடை தங்கபஸ்பம்வைத்துச் சாப்பிட்டு பாலும் அன்னமும் போசித்துவர விந்தூறும் தாதுகட்டும் தேகம்பலக்கும்.

முத்துபஸ்பம்.

முத்தைச்சங்கம்பழச்சாற்றி லிரண்டுநாளூறவைத்து முள்ளிப் பழச்சாற்றால் மெழுகு போலரைத்து வில்லைசெய்துகாயவைத்தொட் டிலிட்டுச் சீலைசெய்து முப்பதெருவிற் புடம்போட்டுதங்கபற்பத்து டன்சேர்த்து சாப்பிட தாதுகட்டும் மேகவியாதிகள் தீரும்.

அயபஸ்பசெந்தூரம்

நாலுபலம் சுத்திசெய்த அயத்தில மாஞ்செவிக் கள்ளிப்பால் விட்டு ரவியில்வைக்கநீறும் அதை உதயம்பட்டைச் சாற்றால் நாலு சாமமாட்டி பத்துபுடம்போடச்செந்தூரமாகும் அனுபானத்திலிட தேகம்இறுகும் விந்தூறும் தாதுகட்டும்.

சிங்கிபஸ்பம்.

மான்கொம்பை நாலாய்ப்பிளந்து சிறுதுண்டுகளாய் நறுக்கி ஒருநாள் குப்பைமேனிச்சாற்றில் ஊறவைத்து மேற்படி யிலையை யரைத்து கவசஞ்செய்து காயவைத்து ஒட்டில்பரப்பி மேலோடு மூடிச்சந்துவாய் சீலமண்செய்து ஐம்பதெருவிற் புடம்போட்டெடு த்து ஆவின்பால்விட்டரைத்து வில்லை தட்டிகாயவைத்து முன்போற் புடம்போட பஸ்பமாகும் அனுபானங்களில் ஷை பஸ்பத்துடன் பவளபற்பஞ்சேர்த்து கொடுக்க நீரடைப்புகல்லடைப்பு சதையடை ப்பு நீரெரிவு க்ஷயம் ஈளை இருமல் ஊஷ்ணம் மேகசாங்கை தீரும்.

மான்கொம்பைஇழைத்து கோவைசாற்றினுல் ஒருநாளூறவை த்து மறுநாள் நன்றாய்காயவைத்து ஒட்டிலிட்டுச் சீலைசெய்து முன் போற் புடம்போடநீறும் அதையனுபானங்களிலிட மேற்காட்டிய வியாதிகள்தீரும்,

கல்நார் பஸ்பம்.

கல்நாரைச் சிறிதுண்டாய்ப்பிளந்து ஒட்டிலிட்டு அதற்குக்கீழு மேலும் கோங்கிலவம்பட்டையை இடித்துப்போட்டு அப்பால்ஷை பட்டைக்கியாழம் விட்டரைத்து மூன்றுபுடம்போட தவளம்போ லநீறும் தேனிலாவது தூதுவேளை லேகியத்திலாவது கொள்ளச் சிலேத்மநோய் கூசா-நீங்கும் மேகசாங்கைதீரும் பற்பத்தை பல்விள க்கத் தந்தமிறுகும்.

பஞ்சலவணபஸ்பம்.

பஞ்சலவணம் வகைக்குபலம்-வ கல்வத்திட்டு பிரண்டை முரு ங்கைபட்டை குப்பைமேனி நொச்சிகுமரி இவைகளின் சாற்றால வகைக்கு ஒருசாமமரைத்து வில்லைதட்டிக்காயவைத்து ஒட்டிலிட்டு சீலைசெய்து பத்தெருவிற் புடம்போடப் பற்பமாகும் அதற்கு காலி லொன்று பெருங்காயஞ்சேர்த்து தேன்விட்டு மெழுகு போலரைத் துச் சிமிளில்வைத்துக்கொண்டு வேளைக்கொருகழஞ்சுவிதம் வியா தியின்பலத்துக்குத் தகுந்தபடி கால்மண்டலம அரைமண்டலங்கொ ள்ள வாதம்வாயு குற்றல் குடல்புரட்டல் வயிற்றுப்பொருமல் செரி யாமை மந்தம் மகோதரம்நீங்கும்.

பற்பப்படலம்-முற்றிற்று.

---

# திராவகப் படலம்.

௫ய் ஆண்டு பிரயோகிக்கலாம்.

அதாவது சகலவிதமான லவணவகை உபரசங்களை கிளாசுப் பாத்திரங்களிலும் வாலைப் பாத்திரங்களிலும் புட்டி வகைகளிலும் நீர்பெருக புகைநீர்பிடித்தலால் திராவகப் படலமெனப் பெயர் பெற்றது.

## விருத்தம்.

சொன்னோதிராவகத்தின் மார்க்கமெல்லாஞ்
   சுலபமாய்பலநூலு மெல்லாம்பார்த்து
பன்னவேலோகங்கள் நீறயார்க்கும்
   பாடினார்நீத்திணங்சஞ் சுருக்குவேதை
என்னவேயிந்நூல்போ லாருஞ்சொல்லார்
   என்மக்காளுங்களுக்கு வுரைத்தேன்யானும்
மன்னேகேள் ஆத்துமரட்சாமிர்தத்தை
   மண்டலத்திறபண்டிதற்கா யரைந்திட்டோமே.

## மகாதிராவகம்.

எருக்கு துத்திதாழை முருங்கைஊமத்து நாயுருவிபிரண்டை அறுகு சித்திரமூலம் தென்னோலை வாழைக்கிழங்கு குப்பைமேனி அறுகு இவைகளை சுட்டசாம்பல் வகைக்குபடி-க வேறுபாண்டத்திலிட்டு ஒவ்வொன்றிலும் ச-படி சலம்விட்டுக் கரைத்துவைத்து நாலாநாள் தெளிவிறுத்து காய்ச்சி குழம்புபதத்தில் பீங்கானில் விட்டு மோர் தெளித்து இரவில்பனியில்வைக்க உப்புறைந்திருக்கும் அதை ரவியில்காயவைத்து வகைக்குபலம்-ந கல்லுப்புவளையலுப்பு இந்துப்பு வெடியுப்புவாச்சாரம் வெண்மையாய்வறுத்த துருசு துத்து பூநீர் வகைக்குபலம்-ரு சிவக்கவறுத்த அன்னபேதிபலம்-கரு சவுட்டுப்பு பலம்-உய சீனம்பலம்-எா ஐந்தாங்காச்சல்வெடியுப்புபலம்-ய இவைகளை பொடித்து மூன்றுபங்குசெய்து ஒருபங்கைக்கலசத்திலிட்டுநன்றாய்சினைந்த செங்கல்லை வட்டமாயுரைத்து அதினடுவில் பெருவிரல் ஓடத் தக்கத்தமரிட்டு அதைக்கலசவாயிற் பொருந்தமூடி ஏழுசீலை மண்செய்து காயவைத்ததின்மேல் நார்போத்தசீசாவைத்துச்சீலை செய்து அடுப்பேற்றி தீயெரித்துபொடித்துக் கலசத்திட்டு திராவகம்வடித்து சீசாவிலடைத்துக்கொண்டு க-முதல் கரு-துளிவரை தண்ணீர் கியாழ்முதலான அனுபானங்களிட வயிற்றுவலி குன்மம் பீலிகை நீராமை கவுசிகெண்டை பெருவயிறு வாயுத்திரட்சி காச்சுற்கட்டி சூதகவாயு சூதகத்திரட்சி மகோதர முதலான உதர

ரோகங்கள்தீரும் உவர்மண்ணுஞ் சுண்ணும்புத்தண்ணீரில்கரைத்து அதில்முறிந்த காக்காய்ச்சிப்பியைப் போட்டு வெளுக்கும்வரைக் காச்சி சுத்திசெய்து பொடித்து ஷை திராவகத்திலிடக் கரைத்து செலவாகும் அந்தச்சலத்தையிறுத்துக்கொண்டு அடியிலுறைந்திருக்கும் அதை ஷை சிப்பிரோலரைத்து வீரத்துக்குப்பூசி அப்பிரகபொடியில் வைத்து புடம்போடக்கட்டும் கட்டின வீரஞ்சாரம் வகைக்கு பணவிடை-க சூதம்பலம்-க இவைகளை ஷை ரோலாட்டிக்குகையில் வைத்துதக்கட்டும்.

நாயுருவி தாழை மேனி சிறுசின்னிவாழை தென்னை வெள்ளறுகு உமுரிகள்ளி இவைகளின்உப்பு வகைக்குபலம்-க சவுட்டுப்பு மிவெங்காரம் கல்லுப்பு இந்துப்பு வகைக்குபலம்-க வெடியுப்புபலம் வ சீனம்பலம்-ரு பூநீர்கூடன் சாரம் வெளுக்கவறுத்த துருசு சிவக்க வறுத்த அன்னபேதி பாஷாணம் வகைக்குபலம்-வ சுத்திசெய்த சிப்பிபலம்-வு இவைகளைபொடித்துமூன்றுபங்குசெய்துமுன்போல் திராவகமிறக்கவும் இதில்நவலோகமும்நீறும் செந்தூரமாகும்.

## சங்கத்திராவகம்.

அஞ்சாங்காய்ச்சல் வெடியுப்புபலம்-சு சீனம் இந்துப்பு வகைக்குப்பலம்-ரு சிவக்கவறுத்த அன்னபேதி பலமேழரை வெளுக்க வறுத்ததுருசு கரியுப்பு வகைக்குபலம்-உ சாரபூநீர்வகைக்குபலம் க-பொரிகாரம்பலம்-வ இவைகளைப்பொடித்துமூன்றுபங்குசெய்து முன்போல் திராவகம்வடித்து அனுபானங்களிலிட ஷை வியாதிகள் தீரும் நவலோகம் பாஷாணச்சரக்கும் தீரும்.

## சீனத்திராவகம்.

அஞ்சாங்காச்சல் வெடியுப்புபலம்-கரு சீனம்பலம் மிகல்லுப்பு சவுட்டுப்பு வளையலுப்புபூநீர்வகைக்குபலம்-உ இந்துப்புசாரம்வகைக்குபலம்-க நாயுருவியுப்புபலம்-ரு சிவக்கவறுத்தஅன்னபேதிபலம் ரு இவைகளைபொடித்து மூன்றுபங்குசெய்து முன்போல்திராவகம் வடித்து அனுபானங்களிலிட ஷை வியாதிகள்தீரும் நவலோகச் சத்துக்களின் வீரஞ்சேர்த்து ஷை திராவகம்விட்டரைக்க ரசமாகும்.

## கெந்தகத்திராவகம்.

கெந்தகம் பூநீர் வகைக்குபலம்-மி சீனம்பலம்-உமி வெடியுப்பு பலம்-சமி கல்லுப்பு-ரு இவைகளைப்பொடித்துப் பனியில்வைத்து மெழுகுபோலாட்டி உலர்த்திப்பொடித்து மூன்றுபங்குசெய்துமுன் போல் திராவகம்வடித்து அதில் துருசைதுவைத்து ரவியில்வைக்க நீறும் அதற்குநிகர் காரஞ்சேர்த்து அரைக்கச் செயநீராகும் வீரத்தை வைத்துவாட்ட மெழுகாகும்.

### பஞ்சலவணத்திராவகம்.

வெடியுப்புசீனம் கரியுப்பு வகைக்குபலம்-ரு நவாச்சாரம் வெண்காரம் வகைக்குபலம்-சற இவைகளைபொடித்திராவகம் வடித்து குருவைநெல் புழுங்கலரிசிப் பொருமானிலாவது கிலவாகை சூரணத்திலாவது கொடுக்க வயிற்றுப்பொருமல் வலி வாய் வாயுத் திரட்சி முதலான உதரரோகங்கள் தீரும்.

### மெழுகு திராவகம்.

சாம்பிராணிபலம்-வ வெள்ளைமெழுகு பலம் க கரியுப்புபடி அரைக்கால் சாதிக்காய் சாதிபத்திரி கிராம்பு வகைக்கு விராகனிடை உ இவைகளில் மெழுகை சரண்டியிலுருக்கி அதில்மற்றவைகளைப் பொடித்துதூவிக்கிண்டி ஆறியபொடித்து அதில்காலுசேரங்கைபொடிமணலுஞ்சேர்த்து கலசத்திலிட்டு திராவகம்வடித்து தேகத்தில் பூசி மேலேபிலரப்பிட்டு குளித்துவர சொரிசிரங்கு மேகசொரிரணங்குஷ்டங்தீரும் காசலவெற்றிலையில் வைத்துக்கொடுக்க குன்மம் வயிற்றுவலிதீரும்.

### கரியுப்புதிராவகம்.

சுத்திசெய்த கரியுப்புபலம்-அ படிகாரம்பலம்-சு இவைகளைப் பொடித்து எட்டுப்பலக்கடலைப்புளிப்புடன்கலந்து திராவகம்வடித்து அஞ்சுதுளி தண்ணீர்கலந்துசாப்பிட்டுவரத் தீபனசக்தியையும்தேகபலத்தையுங்கொடுக்கும் வாயு மந்தம் அஜீரணம்நீங்கும்.

### வெடியுப்புதிராவகம்

வெடியுப்புபலம்-உய சீனம்பலம்-சசு இவைகளைபொடித்துஎட்டுபலம் கடலைபுளிப்பில் கலந்து திராவகம்வடித்து தண்ணீரில்ஐந்துதுளிவிட்டு நீடித்தசுரத்தினால் பலயீனமுடையவர்களுக்கு கொடுத்தால் பலமுண்டாகும் காச்சல்கட்டி கரையும்.

எட்டாங்காச்சல் வெடியுப்புசீனம் சிவக்கவறுத்ததுருசுவகைக்குபலம்-சு இவைகளைபொடித்து மூன்றுபங்குசெய்து முன்போல் திராவகம் வடித்துக்கொள்ளவும்

எட்டாங்காச்சல் வெடியுப்புபலம்-ருய சிவக்கவறுத்த அன்னபேதிபலம்-ருய அல்லது-உய சேர்த்துபொடித்து ரு பங்கு செய்து முன்போல்திராவகம் வடித்துக்கொள்ளவும்இதில்வெள்ளிகரையும்

வறுத்தகரியுப்புபலம்-ரு சிவக்கவறுத்த அன்னபேதிபலம்-ய சேர்த்துபொடித்து மூன்றுபங்குசெய்து முன்போல்திராவகமிறக்கிகொள்ளவும் சிவக்கவறுத்த அன்னபேதியைமட்டுங் திராவகம் வடித்து அதிலபலம்-க-ல் வறுத்த ஒருபலகரியுப்பை பொடித்துபோட்டு உலர்த்தி திராவகம் வடித்துக்கொள்ளவும் இத்திராவகம் மொருபங்கு முன்சொல்லிய வெடியுப்புதிராவகம் இரண்டுபங்குஞ்சேர்த்து அதில்பொடாவலோகங்களையும்.

திராவகப்படலம்-முற்றிற்று.

# விரேசனப் படலம்.

## விருத்தம்.

அறைந்திட்டோம்பண்டிதற்குயிந்நூலை
அப்பனேசாத்தியங்களசாத்தியங்கள்
நிறைந்திட்டகுடிநீர்கள் விரேசனந்தான்
நேரானசுகபேதி யிதிலடக்கப்
துறந்திட்டேன்கைபாகஞ்செய்பாகந்தான்
சூட்டினேன்மானிடர்கள் பிழைக்கவென்று
மறைந்திட்டவயித்திய சாரமென்று
மண்டலத்தில்முனிவர்களும் வடித்திட்டாரே

## குடிநீர்.

பிரமிபிலேபிடி-க விரைபோக்கிய கடுக்கால் கழஞ்சு-ச களிப்பாக்குக்கழஞ்சு-ரு சுக்குக்கழஞ்சு உ இந்துப்பு அல்லது முந்திரியுப்புக்கழஞ்சு-க இவைகளைச்சிதைத்து ஒருபடிதண்ணீரிற்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து மூன்றுதபா வடிகட்டிச்சாப்பிட நன்றாய் விரேசனமாகும் பிரமிபிலேயைநீக்கி மத்தமருந்துகளை மயனமாய்ப் பொடித்து அரைக்கால்படி இஞ்சிச்சாற்றால் கலந்துகொடுக்க பழய மலமும்மலபந்தமும்வாயுவும்நீங்கும்குளித்துமோரசனஞ்செய்யவும்.

தேங்காய்ப்பூவும் முடக்கொத்தானிலையும் ஓர்நிறையாய் பிட்டவித்து அரைக்கால்படி சாறுபிழிந்து வடிகட்டிச் சாப்பிட விரேசனமாகும் அல்லது ஒருபிடி முடக்கொத்தானிலையை அவித்துப் பிழிந்த தண்ணீரில் கொஞ்சம்பழம்புளி கடுகுசீரகம் மிளகுசேர்த்து ரசஞ்செய்து அரைக்கால்படியில் அரைவீசம்படி சித்தாமணக் கெண்ணெய் விட்டு மத்தித்துச்சாப்பிட விரேசனமாகும் குளித்து அசனஞ்செய்யவும்.

இந்துப்பு விராகனிடை-க களிப்பாக்கு விராகனிடை-உ கடுகுரோகணி விராகனிடை-ரு கடுக்காய்விராகனிடை-ச நிலவாகைவிராகனிடை-ரு கருவேலங்கொழுந்து விராகனிடை-சு சுத்தாழஞ்சருகு விராகனிடை-எ பிரமிபிலே விராகனிடை-அ இவைகளைச் சிதைத்து அரைப்படி தண்ணீரில்போட்டு நாலிலொன்றாய்வற்றவைத்து ராதுதபா லடிகட்டிகொடுக்க நன்றாய் விரேசனமாகும்.

தேங்காய்ப்பால்படிமாகாணி மிதிபாகச்சாறு அரைமாகாணிப்படி இவைகளைமத்தித்துசாப்பிட விரேசனமாகிக் கிருமிகள்விழும் மேகநீர் மேகப்புண்நீங்கும் புளிதள்ளி நீர்க்கஞ்சிகொள்ளவும்.

பூவரசம்பட்டையில் ஆவின்பால்விட்டிடித்து நாலாறுதபாவடி கட்டி உட்கொள்ள விரோசனமாகும் புளிதள்ளி நீர்க்கஞ்சி கொள்ள மலட்சி நீர்க்கட்டுநீங்கும்.

சிறுசெருப்படையையும் ஈருள்ளியையும் இடித்து சாறுவாங்கி ஆறுதபாவடிகட்டிச் சாப்பிடபேதியாகும் மேகச்சிறங்கு முதலானவைகள் நீங்கும்.

சூரணம்.

சிறுநாகப்பூ ஏலம் லவங்கப்பட்டை லவங்கப்பத்திரி வாய்விளங்கம் திரிகடுகு முந்திரியுப்பு அல்லதுஇந்துப்பு இவைகளை ரவியுலர்த்தி வடிகட்டின சூரணம்வகைக்கு விராகனிடை-ந பாலிலவித்துச் சுத்திசெய்துலர்த்தி யிடித்தபொடி விராகனிடை-எஉ சேர்த்து திரிகடிசீனிலாவது வெந்நீரிலாவதுகொள்ள விரோசனமாகும் குளித்து மோசனங்கொள்ளவும்.

பாலிலவித்து சுத்திசெய்துலர்த்தி இடித்தஅதிமதுரம்விருகனிடை-உ திப்பிலிதூள்விருகனிடை-கஉ இவைகளை ஆவினெய்யிற்குழைத்து ஆசனத்தின்பேரில் இரவிற்சாப்பிட்டுவர மலபந்தம்நீங்கும்.

கருஞ்சீரகப்பொடி முந்திரியுப்புவகை விருகனிடை-உச சுக்குபொடிவிருகனிடை-உ ஒன்றாய்கலந்து க-விருகனிடை இரவில் ஆசனத்தின்பேரில் சாப்பிட்டுவர காலையில்மல விர்த்தியாகும் மலசட்டு நீங்கும்.

ஜாலபத்தூள் விருகனிடை-உச முந்திரியுப்பு விருகனிடை-ச சுக்குப்பொடிவிருகனிடை-உ இவைகளை ஒன்றாய்க்கலந்த பொடி விருகனிடை-க கற்கண்டு பொடியிற்கொள்ள விரோசனமாகும்.

சுக்கு பெருங்காயம் கருவேப்பிலை வகைக்குதோலா-௩ திப்பிலி நற்சீரகம் இந்துப்புவகைக்கு தோலாஅரைக்கால் இவைகளை ரவியுலர்த்திப்பொடித்து நெய்யில்மத்தித்து போசனத்தின்பேரில் சாப்பிட்டுவர வாயும் மலக்கட்டும் நீங்கும்.

கருவேப்பிலையும் நிலவாரையிலையும் ஓர்நிறையாய் பொடித்து திரிகடிதேனில் மத்தித்து ஆசனத்தின்பேரில் சாப்பிட்டுவர மலக்கட்டும்நீங்கும்.

திரிகடுகு சீரகம் இந்துப்பு கருவேப்பிலை பெருங்காயம் ஓர்நிறையாய் சூரணித்து திரிகடி ஆவின்நெய்யில் மத்தித்து இரவில் ஆசனத்தின்பேரிற் சாப்பிட்டுவர மலக்கட்டுநீங்கும்.

திருகுகள்ளிவேர்ப்பட்டையை ஆவின்பாலிலவித்துக்சமூவிநிழலிலுலர்த்திக் கால்விருகனிடையைத் தாம்பூலம் அருந்தும்போது கூடப்போட்டு மென்று அமிர்தத்தைஉட்கொள்ள நன்றாய்விரோசிக்கும் சந்தனத்தை தேகத்திற் பூசிக்கொள்ள நிற்கும் வாயுப்பலபந்த நீங்கும்.

கடுக்காய்பலம்-ச அதற்குநிகர் திரிகடுகுசீரகம் ஓமம் இந்துப்பு நருக்குமூலம் ஓர்நிறையாய்பொடித்து திரிகடிப்பிரமாணஞ் சாப்பிட்டு வெந்நீர்கொள்ள மலசுத்தியாகும்.

கிருமிவிரோசனம்.

ஒருநாரத்தங்காயைச் சிறுக அரிந்ததில் திரிகடுகு இந்துப்பு காயம் கருஞ்சீரகம் நற்சீரகம் வகைக்குவிராகனிடை-க இவைகளை சூரணித்துதூவிக் கள்ளிப்பால்விட்டுபிசறி எட்டுகாள்வரையிற் காய வைத்துப் பொடித்து பணவிடைவெல்லத்திலாவது, வாழைப்பழத்திலாவது வைத்துக்கொடுக்க விரோசனமாகும் வாயுமலக்கட்டு பெருமல்தீரும்.

கிருமிகள் பந்துபந்தாய்விழும் மாதுளைவேர்க் கொழுந்திலும் கிருமிவிழும்.

ஏழுமிளகும் மிதிபாகயிலையும் அரைத்து ஒரு கொட்டைபாக்குப்பிரமாணங்கொடுக்க பொடிக்கிருமிகள் கூட்டோடுவிழும்.

வேப்பீர்க்கு-ம கடுக்காய்-ச இவைகளைப் பிரண்டைச்சாற்றால் மயனமாயாட்டி விளக்கெண்ணெயில் மத்தித்துகொடுக்க கிருமிகள் விழும்.

ஓமம் பூரசவிரை வேப்பீர்க்கு பிரண்டை யிவைகளை வெள்ளாட்டுநீரிற் கொழுஞ்செய்து வடிகட்டிகொடுக்க பந்துபந்தாய் கிருமிகள்விழும்.

இரண்டு பூரசவிரையை எருமைசாணியிற் பொதிந்து வைத்திருந்து காலையில் தோலைநீக்கி ஆவின்பாலி லரைத்துக்கலக்கி குடிக்க கிருமிகள் கூட்டோடேவிழும்.

சரக்கொன்றைக் கொழுந்தை அவித்துப் பிழிந்த தண்ணீரிற் சீனிகலந்து அரைக்காற்படி சாப்பிடக் கிருமிகள்விழும்.

ஒருவிராகனிடை பேய்ப்பீர்க்கம் விரைப்பருப்பை யரைத்து வெந்நீரிற் கலக்கிகொடுக்க விரோசிக்குங் கிருமிகள்விழும்.

அரைவிராகனிடை மாம்பருப்பையாவது பூனைக்காலியையாவது தேன் வெல்லத்தில்கொடுக்க கிருமிகள்நீங்கும்.

எண்ணெய்.

ஆவின்பால்படி-உ சிற்றாமணக்கெண்ணைபடி-வ இவைகளை ஒன்றாய்க்கலந்து அதில் வேலிப்பருத்தி வேர்பட்டை ஒரு எலுமிச்சங்காய் பிரமாணம் எள்ளுபலம்-க அரைத்துப்போட்டுக் காச்சி பதத்தில்வடித்து நாலுபூரசவிரை மயன்மாய்ப் பொடித்துபோட்டு ஐந்துநாட் சென்றபின்பு காசளவுசாப்பிட பேதியாகி கிருமிகள் விழும் சுடுகஞ்சிகொள்ளவும்.

சிற்றாமணக்கெண்ணெய்படி-உ ஆவின்பால்-உ ஒன்றாய்க் கலந்து அதிமதுரம் இந்துப்பு கடுக்காய் கடுகுரோகணிவாளப்பருப்புவகைக்குகழஞ்சு-உ அரைத்துபோட்டுப் பதமாய்க்காய்ச்சி வடித்து சிறுபிள்ளைகளுக்கு ஒருகரண்டியும் பெரியோர்களுக்கு மூன்றுகரண்டியுங்கொடுத்து ஒருநாழிகைக்குப் பின்பு வெந்நீர்கொள்ள நன்றாய் விரோசனமாகி வாயுவாதம் சிரங்கு சொரி கரப்பன் சன்னி மாந்தம் அஸ்திசுரம் அஸ்திவெட்டை தேகவலி கடுப்புவாதம் நீர்சுருப்பு பித்தம்நீங்கும் பத்தியம் உப்புசேர்த்து நீர்க்களிகொண்டு மாலையில் சீரகம் மிளகுகளுக்கு இவைகளைக் கியாழஞ்செய்து சாப்பிட்டிரவில் விரோசனஞ்செய்பவும்-

சநுள்ளி இண்டக்கொழுந்து கடுக்காய்தோல் இவைகளைச்சிதைத்து விளக்கெண்ணெயிற் போட்டெரித்து சிறுகுழந்தைகளுக்கு ஒருசங்குகொடுக்க விரோசனமாகி கிருமிவிழும்.

விளக்கெண்ணெய்படி-உ கள்ளிப்பால்படி அரிக்கால் முற்றின தேங்காய்ப்பால் படி-உ சிறுக அரிந்த வெள்ளைப்பூடுபடி அரிக்கால் இந்துப்பு பெருங்காயம் சவுக்காரம் வகைக்குகழஞ்சு-க மயனமாயாட்டிப்போட்டு காய்ச்சிவடித்து காசிடைகொடுக்கக்கிருமி கூட்டோடேவிழுந்து வாயுபொருமல் மேகசூலை சொரிசிரங்குதீரும்.

சிறுசின்னியைச் சுட்டசாம்பல்படி-உ நாலுசலத்திற் கரைத்துவைத்து நாலாநாள் தெளிவிறுத்துக் காய்ச்சி உப்பெடுத்து பணவிடைகொடுக்க விரோசனமாகி நீர்க்கட்டுவாயு குன்மம்வாதம் அக்கினிமந்தம் கைகால்பிடிப்பு சூலைசோகை பாண்டுகாமாலை வீக்கம்பொருமல் பயித்தியவாயுநீங்கி பசியுண்டாகும் தாதுவிர்த்தியுண்டாகும்

நாபிவிரோசனம்.

இரசம் கெந்தகம்வகைக்கு விராகனிடை-க வாளம் விராகனிடை-ங அழிஞ்சிவிரைபருப்பு விராகனிடை-உ வெங்காரம் விராகனிடை-ரு சிற்றாமணக்கின்பருப்பு விராகனிடை-சு காட்டாமணக்கின்பருப்பு விராகனிடை-எ கொன்றைப்பழத்தின்பருப்பு விராகனிடை-அ கடுக்காய்தோல் விராகனிடை-கூ முருக்கன்பருப்பு-ய இவைகளை கள்ளிப்பாலால் மூன்றுநாளரைத்து முற்றினதேங்காய்க்குள்ளடைத்து பதினைந்துநாள் தானியப் புடம்வைத்தெடுத்துச்சிரட்டைநீக்கியரைத்து வெண்கலப்பாத்திரத்திலப்பிச் சூரியபுடம்வைக்க தயிலமிறங்கும் அதைச்சிமிழிலடைத்து அனுப்பிரமாணம் நாபியில்வைக்க விரோசனமாகும் குளிர்ந்ததண்ணீர் குளித்து விரோசனஞ்செய்து சந்தனத்தை நாபியிற்பூச பேதிநிற்கும் எலுமிச்சம்பழம் மல்லிகைப்பூ இவைகளிற்றடவி முகர்ந்தால் விரோசனமாகும்.

## பூவிரோசனம்.

இரதம் செந்தகப்வெங்காரம் வகைக்குவிராகனிடை-க வாளம் விராகனிடை-ரு ஆமணக்கின்பருப்புவிராகனிடை-சுா காந்தோலரிசி விராகனிடை-எ பூரசம்விரை விராகனிடை-ய புங்கம்பருப்பு விராகனிடை-கக இவைகளைக் கொடிக்கள்ளிப்பாலால் மூன்றுநாளாட்டி தேங்காய்க்குள்ளடைத்து க-ம்நாள் நெல்லுக்குள் வைத்துச் சிரட்டைநீக்கி அரைத்துப் பீங்கானிலப்பி ரவியில்வைக்கத்தக்க தயிலம் வடியும் அதை மல்லிகைப்பூச்செண்டில் தடவிமுகர விரோசனமாகும் சந்தனத்தைப் பூசிக்கொள்ள நிற்கும்

வெள்ளைக்குங்கிலியத்தை கள்ளிக்குள்வைத்து ஒருபட்சஞ் சென்றெடுத்துயர்த்திப் பொடித்துத் தனலிலிட்டுப் புகையில் அலரிப்பூச்செண்டிற் பிடித்து முகர்ந்துபார்க்க பேதியாகும்.

அழிஞ்சி சேர்வாளம் இவைகளுள்பருப்பு வகைக்குப் படி-க அரைத்து சலக்கிக்காட்ச்சி யெண்ணெயெடுத்து செவ்வலரிப்புஷ்பத்திற்ற_வி பனியில்வைத்தக் காலையில் முகர்ந்து கொண்டிருக்க விரோசனமாகும் குளிர்ந்தஜலத்தில் ஸ்நானஞ்செய்து சந்தனம் பூசிக்கொள்ள பேதிநிற்கும்.

## மாத்திரை.

எருமைச்சாணிப்பாலிலும் எலுமிச்சம்பழச்சாற்றிலும் ஆவின்பாலிலும் அவித்துச் சுத்திசெய்து மேற்றோல் இதழ்நீக்கி வாளம் விராகன்-சுா காசிக்கட்டிவிராகன்-கஉ தேன்விட்டு நன்றாய்புரைத்து ஒருகுன்றிமணியிடையாய் மாத்திரைசெய்து ஒருமாத்திரை கொடுக்க விரேசிக்கும் வயிற்றுவலி அதிகவாந்தி கடினபேதி கண்டால் எலுமிச்சஞ்சாற்றைக் கொடுக்கநிற்கும் குளித்து விரோசனஞ் செய்யவும் அசதிசன்னியிழுப்பு கடினசுரத்துக்குங் கொடுக்கலாம்.

சுத்திசெய்த வாளம் விராகனிடை-எ சாதிலிங்கம் ரசபுஷ்பம் திரிகடுகு சிற்றாமணக்கின்பருப்பு வெங்காரம்வகைக்கு விராகன்-க குளிர்ந்தசலத்தாலாட்டி குன்றிபோலுண்டைசெய்து வாழைப்பழத்துக்குள்வைத்து உண்டு கொஞ்சங்குளிர்ந்த சலங்குடிக்க விரோசனமாகும் சுடுதண்ணீர்குடிக்க நிற்கும் வெந்நீரிற்குளித்து விரோசனஞ்செய்யவும் அதிகமானால் நெல்லிப்பருப்பை மோரிலரைத்துக் குடிக்கநிற்கும்.

சுத்திசெய்த சேர்வாளமுத்து-உய எலுமிச்சம்பழச் சாற்றில் மூன்றுநாளூறவைத்துக் கழுவிக் கல்வத்திலிட்டு கடுக்காய்-ய மிளகு சுாய சுக்குதிப்பிலி நற்சீரகம வகைக்கு விராகனிடை-ரு பழச்சாற்றாலாட்டி சுண்டைக்காய்போ லுண்டைசெய்து வெந்நீரிலிட விரோசனமாகும் வாயுவாதம் கிருமிநீங்கும் அதிகப்பட்டால் வசம்புச் சாம்பலைத் தண்ணீரிற் கரைத்துகொடுக்க நிற்கும்.

ரதம்விராகனிடை-க கெந்தகம் விராகனிடை-உ பெரியகாரம் விராகனிடை-ரு மிளகுவிராகனிடை-ச கடுக்காவிராகனிடை-ரு வாளபபருப்பு விராகனிடை-சா வெல்லம் விராகனிடை-ககூ சேர்த்தரைத்து சுண்டைக்காய்ப் பிரமாணஞ்சாப்பிட விரேசனமாகும் மோரசனஞ்செய்ய வாயுசுரம் நீங்கும்.

சூதபற்பம் லிங்கம் வெங்காரம் இந்துப்பு கடுக்காய் கடுகுரோகணி வெள்ளைக்காசகணுன்வேர் வகைக்கு விராகனிடை-ரு சுத்திசெய்தவாளம் விராகனிடை-அ இவைகளைப் பிரண்டைச் சாற்றிலாவது வெந்நீரிலாவது கொடுக்க விரேசனமாகும் மிளகுநீரசனஞ் செய்ய வாயுசுரம் நீர்க்கோர்வை வயிற்றுப்பொருமல் நீங்கும்.

கடுகுரோகணி வெள்ளைக்காக்கணுன் வேர்பட்டை சாரணைவேர் மிளகு திப்பிலி வெங்காரம் சிவதை வகைக்கு விராகனிடை-ச சுத்திசெய்த நேர்வாளப்பருப்பு விராகனிடை-கச பிரமிபிலைச்சாற்றால் மெழுகுபோல் மூன்றுநாளரைத்து இஞ்சிச்சாறு பனைவெல்லம் வெந்நீர் இவைகளிற்கொடுக்க விரேசனமாகும்.

சுத்திசெய்தவாளம் விராகனிடை-அ சாஸ்திரவேதி சிற்றாமணக்கின் பருப்புகாரம் வகைக்குவிராகனிடை-க கடுக்காவிராகனிடை-உ கற்றாழம்பாலால் ஒருநாளாட்டி தூதுளங்காய்போல் சாப்பிட விரேசனமாகும் வெந்நீர்குடிக்க விரேசனம் அதிகப்படும் தண்ணீர்குடிக்கநிற்கும் மோரசனஞ்செய்யவும்.

சுத்திசெய்த தாளகம் திரிகடுகு திரிபலை சிவதைவகைக்கு விருகனிடை-ரு நேர்வாளம் விருகனிடை-சா இரதம்கெந்தகம் வகைக்கு விருகனிடை-க இஞ்சிச்சாற்றி லொருநாளாட்டி குன்றிபோலுண்டைசெய்து இஞ்சிச்சாற்றிலாவது வெல்லத்திலாவது கொடுக்க விரேசனமாகுஞ் சுரம்நிற்கும்.

ஏலம் லவங்கம் அதிமதுரம் கடுகுரோகணி திப்பிலிமூலம் சாத்திரவேதி சண்பகமொட்டு இரதபற்பம் வகைக்கு விருகனிடை-க நேர்வாளபருப்பு விராகனிடை-சா வெந்நீரிலரைத்துக் குன்றிபோலுண்டைசெய்து வெல்லத்திற் கொடுக்க விரேசனமாகும் சுரம் நிற்கும்.

திரிகடுகு சீரகம் கடுகுரோகணி முருங்கைப்பூ சுத்திசெய்த பூரம் வகைக்கு விருகனிடை-க நேர்வாளபருப்பு விராகனிடை-எ குளிர்ந்தஜலத்திலாட்டி குன்றிபோலுண்டைசெய்து தேன்பால்வாழைப்பழம் சீனி இவைகளில் வியாதிக்குத்தக்கபடி கொடுக்க கிருமி வாயுமந்தம் பழஞ்சுரம் சோகைகாமாலை பாண்டு பித்தவெறி குன்மம் குடல்வாதம் வாயுக்குத்து கெண்டை கவுசிநீங்கும்மோரசனஞ் செய்யவும்.

### பேய்க்குமட்டிக்குழம்பு.

பேய்க்குமட்டிக்காய்ச்சாறுபடி-௧ சாயம்விராகனிடை-௰ கடுகுரோகணி கருஞ்சீரகம் வால்மிளகு இந்துப்பு வெங்காரம் வகைக்குவிராகனிடை-௨ பேய்குமட்டிக்காய்ச் சாற்றைக் குழம்பாய் காய்ச்சி கல்வத்திலிட்டு மற்றமருந்துகளையும் பொடித்துப்போட்டு அரைத்துச் சிமிளில்வைத்துக்கொண்டு குன்றியிடைபனைவெல்லத்திற்பொதிந்துகொடுக்க விரோசனமாகி வாதம்-௮௰ம் வாயு அஷ்டகுன்மம் சூலை கைகால்முடக்கும் தீரும் போரசனங்கொள்ளவும்.

ஒருபடி பேய்குமட்டிக்காய்ச் சாற்றைக் குழம்புபோல் காய்ச்சி கல்வத்திலிட்டு அதில் கருஞ்சீரகம் சுத்திசெய்த நேர்வாளப் பருப்பு கடுகுரோகணி கடுக்காய் வெங்சாரம் இந்துப்புகாயம் திப்பிலி வகைக்குகழஞ்சு-௧ கருப்புக்கட்டி கழஞ்சு-௫ மயனமாய்ப் பொடித்துப்போட்டு அரைத்துச் சிமிளில்வைத்துக்கொண்டு குன்றியிடை பனைவெல்லத்திலிட விரோசனமாகி சவுசெண்டை அருவை வெப்புப்பாவை பெருவயிறு மகோதரம் பீலிகை உளமாந்தை பிறசீர்க்கோவை சோகைகுன்மம் வலிவீக்கம் வாயுதீரும் குளிர்ந்தசலத்திற்குளித்து மோரசனஞ்செய்யவும்.

### நாரத்தங்காய்க்குழம்பு.

கச்சு நாரத்தங்காய்ச் சாறுபடி-௫ காடிபடி-௨ ஒன்றாய் கலந்து அல்லதுருவுள்ள ஐம்பது இருப்பைப்போட்டுஎட்டுநாளூறவைத்து இரும்பை எடுத்துபோட்டு குப்பைமேனி அவுரிசாரணை கையாந்தகரை பொன்னாங்காணி பிரமி வகைக்குச்சாறுபடி-௩ ஒன்றாய்விட்டு வெள்ளுள்ளி சுக்கு கடுக்காய் சதகுப்பை ஓமம் நற்சீரகம் திப்பிலி கடுகு சுழற்சிபருப்பு சச்சோலம் அதிமதுரம் மிளகு அதிவிடையம் நெள்ளிமுள்ளிதான்றிக்காய்சாத்திரவேதி ஏலப இந்துப்புவெடியுப்பு சாரணைவேர் குருந்தகட்டிவேர்வகைக்குபலம்-௧ சவுக்காரம்பலம்௩ அரப்பொடி சிட்டம் வகைக்குப்படி அரைவிட்டுக் குழம்புபோற் கிண்டி வேளைக்கு ஒருபாக்களவு மண்டலஞ்சாப்பிட்டு மோர்குடிக்க நீர்க்கட்டு மலக்கட்டுநீங்கும் மகோதரம் பெருவயிறு நீர்க்கோவை வாயுத்திரட்சி அகுவை சோகை பாண்டு காமாலை [illegible] வயிற்றுவிப்புருதி சூலைவாய்வு குன்மம் வெப்புப்பாவை காசக்கட்டி கவுசிதீரும்.

### நவாச்சாரக்குழம்பு.

நவாச்சாரத்தைக் கொடிக்கள்ளிப்பாலாலாட்டிச் சிமிளில்வைத்துக்கொண்டு குன்றியிடைகொடுக்க விரோசிக்கும் அதிகபட்டால் எலுமிச்சம்பழச் சாற்றைக்கொடுத்து விரோசனஞ்செய்ய நீக்கும் பெருவயிறு வாயுக்கட்டி மகோதரம் நீராம்பல் தீரும்.

சிங்கக்குழம்பு சாதிலிங்கம் வெங்காரம் வகைக்குக் கழஞ்சு-க சுத்திசெய்தவாளம் இந்துப்பு வகைக்குக் கழஞ்சு-உ சிற்றாமணக் கின்பருப்பு கழஞ்சு-ச மெழுகுபோலரைத்துக்குன்றியிடை இஞ்சிச் சாற்றிலாவது மிளகுக்கியாழந்தனிலாவது கருப்புக் கட்டியிலாவது கொடுத்து ஒருநாழிகைக்குமேல் வெந்நீர்கொள்ள விரேசிக்கும் குளிர்ந்ததண்ணீர் குடிக்கநிற்கும் உப்பிட்டுக்கஞ்சி கொள்ளவும்.

லிங்கம் விராகனிடை-க பொரிதாரம் விராகனிடை-உ சுத்தி செய்தவாளம் விராகனிடை-ச ஆமணக்கின்பருப்பு விராகனிடை-அ முப்பு விராகனிடை-க இவைகளைபரைத்துக் குன்றியிடைகொள்ளா மல் சலம்தீர்க்கும் மோரசனஞ்செய்யவும்.

சுத்திசெய்த லிங்கம்பலம்-க ரசகர்ப்பூரம் வெங்காரம்வகைக்கு பலம்-ந சுத்திசெய்த தொலிமுனை நீக்கினவாளம் பலம்-உ சிற்றாம ணக்கின்பருப்பு பலம்-க இவைகளைபரைத்து செப்புச்சிமிளில் வை த்துக்கொண்டு பணவிடை சித்திரமூலக் கியாழத்திலுண்ண சூலைமு டக்கும் கொச்சிச்சாற்றில் வாதசுரமும் கொடிவேலி குப்பைமேனி நத்தைச்சூரி இவைகளின்சாறுபடி அரைக்கால் எண்ணெபடி-ந ஒன் றாய்கலந்து காச்சிவடித்த எண்ணெயிற் கிரந்தியும் ஏலம் அதிமதுரம் மல்லி தக்கோலம் அரத்தை கோஷ்டம் வற்றவைத்த கியாழத்திற் கொள்ள தொந்தசுரமும் வேலிப்பருத்தியிலைச் சாற்றில் திமிர்வாத மும் கடுக்காய்பூ கழற்சிபருப்பு வெள்ளுள்ளி சுக்கு வகைக்குவிராக னிடை-ச அரைத்து அரைப்படி தண்ணீரிற்போட்டு அரைக்காற்ப டியாய் வற்றவைத்த கியாழத்தில் வாயுவும் அண்டவாயுவும் சங்கம் வேர்பொழுத்தில மேகச்செரி விஷகரப்பானும் நிலவாரைக்கியாழ த்தில் வலிகுன்மமும் செவ்வுடுக்காயும் பூவரசம்பட்டைநீந் சேர்த்து செய்த கியாழத்தில் ஊதுகாமாலையும் சிறுசின்னிச்சாற்றில் பசப் பாண்டியும் பட்டுதாமரையுங் காந்தைச்சாற்றில் கர்ப்பரோகமும் வெல்லத்திலிட இருமியும் தீர்க்கும் வெந்நீர் ஆவின்மோர்கூட்டி அசன குசெப்ப பேதிநிற்கும் குளிர்ந்த தண்ணீர்குடித்தால் பேதியதிகப் படும் இந்நாளிட்டால் வசம்பைச் சுட்டசாம்பலை சுடுதண்ணீரிற் கலக்கிக்கொடுக்க நிற்கும்.

என்ற பிரமாணம் வெற்றிலைச்சாற்றில் மத்தித்துக்கண்ணிலிட வலிப்பு சன்னிதோஷந்தீரும்

எருக்கம்பழுப்புச் சாற்றிலரைத்துக் கண்ணிலிட விஷம் நீங் கும் நொச்சிலைச்சாற்றிலிட எலிகடியுந்தீரும்.

அகஸ்தியர்குழம்பு.

பெருங்காயம் இந்துப்பு கடுகுரோகணி வெங்காரம் சருஞ்சீர கம் திப்பிலி சுத்திசெய்த இரதம் நாவிக்கிழங்கு மனோசிலை தாரம்

வகைக்கு விராகனிடை-௧ சுத்திசெய்த வாளப்பருப்பு விராகனிடை ௰ காட்டாமணக்கின் முத்துபருப்பு விராகனிடை-௫ இவைகளை யரைக்க மெழுகாகும் அரைச்சிமிளிலடைத்துக்கொண்டுபணவிடை இஞ்சிச்சுரசத்திலாவது சுக்குக்கியாழத்திலாவது குளிர்சுரம் சன்னி வாதசுரம் அண்டவாதம் வாயு மூலவாயுவும் கடுக்காயில் இரும்லும் கடுக்காய்க்கியாழத்தில் பித்தசுரம் திப்பிலிக் கியாழத்தில் சிலேஷ்ம சுரமும் கிராபபும் மலைதாங்கிவேரும் சேர்த்துச்செய்த கியாழத்தில் பேதிசுரமும் சுக்குமிளகு கியாழத்தில்குளிர்சுரமும் ஆவின்நெய்யில் இரத்தமூலமும் ஆவின்பாலிற் பாண்டும் மிளகுதூள் வெள்ளுள்ளி யில் மகோதரம் பெருவயிறு நீராமைகுன்மமும் தேன் இஞ்சிச்சாற் றில் சன்னியும் சுக்கும் நொச்சியுஞ்சேர்ந்த கியாழத்தில் வாயுவும் சங்கங்குப்பிச் சாற்றிலாவது மிளகுபொரித்த பொரிகாரம் கற்கண்டு இவைகளைப்பொடித்து நெய்யில்மத்தித்து அதிலாவது வெள்ளரிப்பிஞ்சிச் சாற்றிலாவது இளநீரிலாவது காடியிலாவது கொடுக்கநீர்க்கடுப்பு நீர்ச்சுருக்குகல்லடைப்பும் வெள்ளுள்ளிதயிலத்தில் அல்லது வெள்ளுள்ளிசுழற்சி முசுமுசுக்கை கியாழத்தில் சன்னி-௧௩ அரசங் கொழுந்தை ஆவின்பால் விட்டரைத்துக் கொட்டையாக்குப் பிரமாணம் மூன்றுபங்குசெய்து நாளொன்றுக்கு ஒருபங்கிற்கொள்ள கெர்ப்பரோகம் நாவற்பட்டையில வெள்ளாட்டுப்பால் விட்டிடித்துப் பிழிந்தசாற்றில் சீரகப்பொடிதூவி அதிலாவது அல்லது நொச்சி வேர் பங்கம்பாளைவேர் சுக்குமிளகு இவைகளைச் சேர்த்து செய்த கியாழத்திலாவது கொடுக்க ரூதவாயுவும் வாயுக்கட்டியும் இஞ்சிவெள்ளுள்ளி முருங்கைப்பட்டை எருக்கம்வேர் திருகுகள்ளிவேர் புன்கம்வேர் இவைகளைத்தட்டி பிழிந்தசுரசத்தில் உட்கொடுத்து புறவீச்சும் கருப்புக்கட்டி சித்திரமூலம் இவைகளைக் குப்பைமேனிச்சாற்றுலாட்டி தேன்விட்டுமத்தித்து அதிலாவது வில்வம் லவங்கப்பத்திரி கிராம்பு அதிமதுரம் தாளிசப்பத்திரி இவைகளை சேர்த்து செய்த கியாழத்தில் வெண்ணெய்போட்டுக் கொடுக்க நெஞ்சுவலியும் தாளிபிலையும் அவுரியிலையும் வெண்ணெயும் சேர்த்தரைத்து கொட்டைப்பாக்குப் பிரமாணத்தில் வரியன்கடியும் நாவற்கொழுந்துமிளகுவெற்றிலையுஞ் சேர்த்தரைத்துக் கொட்டைப்பாக்குப் பிரமாணத்தில்நல்லவின்விஷமும் சுருள்ளிச்சாற்றில் உள்ளுக்குக் கொடுத்துக்கடிவாயில் தடவ தேட்கடியும் வெல்லம் புகையூறல் பேய்பீர்க்கம் வித்து இவைகளை மேனிச்சாற்றாலரைத்துக் கொட்டைப்பாக்கு பிரமாணத்தில் வளலைகடியும் நொச்சிச்சரசத்தில் திரிகடுகுப் பொடித்தூவிக் கொடுக்க விஷபாகவீக்கம் காடியில் சத்தியெடுத்தலும் ஆவின்பாலிலாவது வெள்ளாட்டு பாலிலாவது மூலவியாதியினால் சீதம்விழுதலும் கெர்ப்பவிப்புருதியும் கர்ப்பரோகமும் ஆவின்நெய்யில் மூலத்தினால்இரத்தம் விழுதலும் அகத்தியிலைச்சாற்றில் மகோதரமும் வெட்டையும் விளக்

கொன்னையில் வாயுத்திரட்சியும் தேங்காய்ப்பாலில் சுழல்வாதமும் கருப்புக்கட்டியில் ஆனந்தவாயும் சுரமும் ஆவின்பாலிற் பித்தமும் பஞ்சமூலக்கியாழத்தில் சன்னி-௧௩-ம் இஞ்சிச்சாற்றில் குன்மம்-அம் வெல்லத்தில் தாபசுரமும் தொச்சிச்சாற்றில் வாதசுரமும் கொத்தமல்லிக்கியாழத்தில் கடுக்கல் அய்யசுரமும் வெள்ளாட்டுதயிரில் வயிற்றுக்கடுப்பும் கருப்புக்கட்டியில சூலை-௯-அம் கிராந்தியும் ஆவின்தயிரில் குன்மவாயும் விலாமிச்சம்வேர் கியாழத்தில் பித்தவெட்டையும் செம்மறியாட்டுப்பாலிலாவது சாம்பிராணித் தயிலத்திலாவது தீராத பெண்ணுக்கு சூ-களும் திரிகடுகில் பலரோகங்களும் வெத்திலைசாத்தில் விஷமும் சாதிக்காய்ப்பொடியில் அசாத்திய சுரமும்நீங்கும்

மேற்படி குழம்பை நல்லெண்ணெயில் மத்தித்துப்போட ரணம் நீங்கும்.

வேப்பெண்ணெயும் நல்லெண்ணெயுங் கலந்து அதிற்குழம்பை மத்தித்துப்போட ஆறாதரணம் ஆறும்.

சிலந்தி அரையாப்பு பிளவைபுற்றுக்கு உமிநீரிலாவது தேனிலாவது குழம்பை மத்தித்துப்போடத் தீரும்.

முலைப்பாலில் மத்தித்து நாசியிலநசியமிட தலைபிடிநீங்கும்.

முலைப்பாலில் ஒரு மருந்தை மத்தித்து நெரிகளிற்பூச நீங்கும்

மரக்கனிலேறி விழுந்துமயங்கின பேர்களுக்கும் தண்ணீரில் முழுகி மயங்கினவர்களுக்கும் கடுகுபிரமாணம் முலைப்பாலில் மத்தித்துக் கண்ணிற்போட நீங்கும்.

குழம்பைத் தணலிற்றடவி புகைபிடிக்க முகவாதசசன்னி பற்கிட்டு விஷகடி கபாலவலி பேய்ப்பசாசு நீங்கும

வேப்பெண்ணெயிலாவது சுக்குக் கியாழத்திலாவது எள்ளுப்பிரமாணம் உரைத்து கண்ணிலிட சன்னிநீங்கும்.

கண்ணில் வெதுப்பு கண்டால் சுடுசோறும் தவிரும் சந்தனமு மத்தித்து கண்ணிற்கட்ட நீங்கும்.

இக்குழம்பிலும் மேல்காட்டியமற்றவாளஞ்சேர்ந்தமாத்திரையிலும் பேதியதிகரித்தால் அதற்குமாற்று வசம்பைச்சுட்ட கரியையாவது ஒருபிடி முருங்கை யிர்க்கையாவது கியாழஞ்செய்து கொடுத்தாலும் எலுமிச்சம்பழ ரசமும் ஆவின்பாலுங் கொடுத்தாலும் புளித்தமோர் காடியைக்குடித்தாலும் காட்டாமணக்கின் கொழுந்தை வாயிலலித்து தொப்புளில்வைத்துக் கட்டினாலும் கோழிமுட்டை சாப்பிட்டாலும் பேதிநிற்கும்.

விரேசனப்படலம்-முற்றிற்று.

———



# தயிலப்படலம்.

அதாவது பலபல மூலிகைகளாலும் பட்டைகளாலும் கல்வகைகளாலும் பால்சேர்த்து யெண்ணெயுடன் காய்ச்சுவதால் தயிலப்படலமெனப் பெயர்பெற்றது ௩-திங்கள் பிரயோகிக்கலாம்.

விருத்தம்

சேர்ந்திடவேயிந்நூலில் வேதைமார்க்கந்
  தெரிவித்தார் சித்தர்களு மனந்தங்கோடி
பேர்ந்திட்ட தயிலங்கள் கைபாகந்தான்
  பேசினார் பலபேரும் பேசினார்கள்
ஆர்ந்திட்ட வாத்துமரட் சாமிர்தத்தை
  • அவனிப்பதிற் பண்டிதற்கு மற்றவர்க்கு
கூர்ந்திட்டேன் யிந்நூலே குருநூலாகக்
  கூறினார் மலையமுனி கூறினாரே.

சந்தனாதித்தயிலம்.

சந்தனத்தூள் பலம்-௰ கன்னாரிநத்தைச்சூரி தண்ணீர்விட்டான் சாரணை இருவேலி அமுக்குறாசிந்தி இவைகளின்மூலம் முத்தக்காசு அதிமதுரம் செஞ்சந்தனம் அகில்விலவேர் தேவதாரம் அதிமதுரம் கோஷ்டம் லவங்கம் லவங்கப்பத்திரி கருவாய்ப்பட்டை தக்கோலம் லவங்கப்பட்டை வகைக்குப்பலம்-௧ இவைகளையிடித்து தூணிநீரிற்போட்டு பதினாறிலொன்றாய் வற்றவைத்துவடித்து அதில் நல்லெண்ணெய்படி-௪ மொசுமொசுக்கைச்சாறு நெல்லிக்காய்ச்சாறுவகைக்குப்படி-௧ பொற்றலையான்சாறுபடி-ற ஒன்றாய்க்கலந்து வால்மிளகு குக்கில் கோஷ்டம் பச்சை பூலாக்கிழங்கு அரத்தை சடாமாஞ்சில் ஓமம் வெளிச்சிம்பிசின் வேம்பாடம்பட்டை ஏலம் மல்லி அபின் சாதிக்காய் கருஞ்சீரகம் கார்போகரிசி சாதிப்பத்திரி மாசிக்காய் சண்பகப்பூ சிறுநாகப்பூ கிராம்பு கிளியூரப்பட்டை நாகணம் புனுகு வகைக்கு விராகனிடை-௨ ஆவின்பாலாலரைத்துப்போட்டு காய்ச்சி வடித்து முழுகிவர வாயுமந்தம் மூக்குநீர்ப்பாய்ச்சல் மண்டைநோய் கபாலவலி கண்ணோய் செவிநோய் வியர்வை தாகம் பினிசம் விரட்சி சலோ சோகை விஷபாகம் குஷ்டம் குன்மம் தடிப்பு க்ஷயம் பிரமேகம் கிறுகிறுப்பு அரோசிபம் நீங்கும்.

சந்தனத்தூள் பலம்-௩௰ விலாமிச்சவேர் வெட்டிவேர் கோரைக்கிழங்கு சீந்தித்தண்டு சிற்றாமுட்டி பேராமுட்டி அமுக்குறா கன்னாரி பற்பாடகம் வகைக்குப்பலம்-௪ இவைகளையிடித்து இருதூணி நீரிற்போட்டு பதினாறிலொன்றாய் வற்றவைத்து வடித்தகியாழத்தில் செவ்விளநீர் பொன்னாங்காணிச்சாறு வகைக்குப்படி-௨ சிறுகீரை பெருந்தலை வல்லாரை பொற்றலைக்கரிப்பான் சிறுசின்னி நெல்லிக்காய் கருப்பூரவல்லி தாமரைவிழுது இவைகளின்சாறு ஆவின்நெய் வகைக்குப்

படி-௧ நல்லெண்ணெய்படி-௪ ஆவின்பால்படி-௪ வெள்ளாட்டுப் பால் தயிர்தண்ணீர் வகைக்குப்படி-௨ கடமிட்டு திரிகடுகு திரிபலாதி கஸ்தூரிமஞ்சள் ஏலம் பூஞ்சாந்தப்பட்டை இலிபூராம்பட்டை லவங்கப்பத்திரி பச்சைபூலாக்கிழங்கு செவ்வல்லிக்கொடி சண்பகப்பூ சந்தனம் கருஞ்சீரகம் நற்சீரகம் செங்கழுநீர்க்கிழங்கு கோஷ்டம் அக்கிரகாரம் மாந்திஷ்டிவேர் கந்திரி மஞ்சள் முததக்காசுவலம்புரிக்காய் வகைக்குப்பலம்-௨ ஆவின்பாலிலாட்டிப் போட்டுக் காய்ச்சி வடித்து அதில்குங்குமப்பூ கோரோசனை புனுகு வகைக்குக் கழஞ்சு-௧ போட்டுத் தலைமுழுகிவர பிரமேகம்நீரிழிவு நீர்ச்சிறுப்பு க்ஷயம்கண்ணெரிவு கண்புகைச்சல் கைகாலெரிவு பிரமியம் கிராந்தி கற்றாழைநாற்றம் அஸ்திசுரம் அஸ்திவெட்டை பித்தமயக்கம் புண்புரைகள் புழுவெட்டு கண்டமாலை குஷ்டம்செரி சிரங்குகுணமாகும்.

சிறகீரை பொன்னாங்காணி ஆவாரையிலை தாமரைக் கிழங்கு தாழைவிழுது இவைகளை ஒர்நிறைபாயிடித்து பதக்குநீரிற் போட்டு நாலிலொன்றாய் வற்றவைத்துத் தயிர்போற் பிழிந்தசாறுபடி-௧ வெட்டிவேர் விலாமிச்சுவேர் சந்தனம் வகைக்குபலம்-௫ செங்கழுநீர்க்கிழங்குபலம்-௨ இவைகளை செவ்விளநீரால் மயனமாயாட்டி முக்குணி சலத்திற்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்த கியாழம்படி-௨௨ நல்லெண்ணெய்படி-௧ ஒன்றாய்க்கலந்து லவங்கம் ஏலம் கோஷ்டம் சண்பகப்பூ சாதிப்பத்திரி மஞ்சிட்டி சாதிக்காய் சடாமாஞ்சில் கிராம்பு சீரகம் கூகைநீர் வகைக்குக்கழஞ்சு-௧ அரைத்துப் போட்டுக் காய்ச்சிவடித்து பச்சைக்கர்ப்பூரம் புனுகுசட்டம் கோரோசனை வகைக்குப்பணவிடை-௨ போட்டுத் தயிலமிட்டுச் சீயக்காய்த்தேய்த்து ஸ்நானஞ்செய்துவர மேகமிருபது நீங்கும்.

## செம்முள்ளித்தயிலம்.

செம்முள்ளி சமூலம்பலம்-௱ தாணிநீரில் எட்டொன்றுப் கியாழஞ்செய்து நல்லெண்ணெய்படி-௨ தாழைவிழுது ஏலம் கருஞ்சீரகம் தக்கோலரிசி வகைக்குப்பலம்-௧ அரைத்துச் சேர்த்துக்காய்ச்சிமுழுகிவர சாசம் தண்ணீர்பாய்ச்சல் அரையாப்பு க்ஷயம் சுவாசமந்தாரகாசம் அண்டவாதம் வீக்கம் விஷவாதந்தீரும்.

## கொடிவேலித்தயிலம்.

கொடிவேலிவேர் பலம்-ய பதக்குநீரிற்போட்டு எட்டொன்றுப் கியாழஞ்செய்து கருஞ்சீரகம் தாளிசப்பத்திரி தான்றிக்காய் வகைக்குப்பலம்-௧ பால்விட்டரைத்து நல்லெண்ணெய்படி-௧ வெண்ணெய் புன்னைக்காய்ப் பிரமாணம் இவைகளைக் கியாழத்தில் சேர்த்துப் பதமாய்க்காய்ச்சி வடித்து முழுகிவர ஆனந்தவாயு தந்தவாயு வாதம் சிறுசெரி இலவு சிரங்கு குஷ்டம் அரையாப்பு கிரந்தி சூலை புண் புரைகள் பிளவை வீக்கம் குணமாகும்.

## நற்சீரகத்தயிலம்.

சீரகம்படி-௨ இடித்துப் பதக்குநீரிற்போட்டு எட்டொன்றாக் கியாழஞ்செய்து வாய்கோலரிசிபலம்-௨ நற்சீரகம்மிளகு கருவேப்பி லை ஈருள்ளி வகைக்குப்பலம்-௧ ஆவின்பாலாலரைத்து நல்லெண்ணெ படி-௩ கியாழத்திற்சேர்த்துக் காய்ச்சிவடித்து முழுகிவர தலைவலி வாந்தி பித்தக்கிறுகிறுப்பு பாண்டுசோகை கபநீர்க்கட்டு உஷ்ணம் ணம் கபாலச்சூடு கபநீர்க்கட்டுத்தீரும்.

## கீழ்க்காய்நெல்லித் தயிலம்.

கால்துலாம் கீழ்க்காய்நெல்லி சமூலத்தையிடித்து தூணிநீரிற் போட்டு எட்டொன்றாய்வற்றவைத்து நல்லெண்ணெபடி-௨ சர்க்கரை பலம்-௫ கடுக்காய்த்தோல் வேப்பம்பிசின் வகைக்குப் பலம்-௧ ஆவி ன்பால் விட்டரைத்துக் கியாழத்தில் சேர்த்துக்காய்ச்சிவடித்துத்தலை முழுகிவர பித்தக்கிறுகிறுப்பு கைகால்காந்தல் உடல்வெளுப்பு மற்ற பித்தத்திலெடுத்த சகலரோகமும் குணமாகும்.

## அகிற்கட்டைத்தயிலம்.

அகிற்கட்டைத் தூள்பலம்-௫௰ தூணிநீரிற்போட்டு எட்டொ ன்றாய் வற்றவைத்துவடித்து அதில்நல்லெண்ணெ படி-௧ கூடவிட்டு அதிமதுரம் தான்றிக்காய் வகைக்குபலம்-௧ ஆவின்பாலால் அரைத் துப்போட்டு காய்ச்சிவடித்து முழுகிவர ஜலதோஷம் குணமாகும்.

## வெட்டிவேர் தயிலம்.

வெட்டிவேர்த்தூள் பலம்-௰ பதக்குநீரிற்போட்டு எட்டொன் றாய் வற்றவைத்து நல்லெண்ணெபடி-௩ அதிமதுரம் நற்சீரகம் தே வதாரம் கடுக்காய் வகைக்குபலம்-ஒ அரைத்துப்போட்டுக் காய்ச்சி முழுக பீனிசம் மண்டைச்சூலை குஷ்டம் பிரநீர்க்கோவை கண்புகை ச்சல காதுமந்தம் தேகஎரிவு காந்தல் குணமாகும்.

## இருவேலித்தயிலம்.

விலாமிச்சுவேர் பலம்-௱ இடித்து தூணிநீரிக்போட்டு ஒருநா ளூறவைத்து மறுநாள் எட்டொன்றாய் வற்றவைத்து வடித்துக்கியாழ த்தில் எள்ளெண்ணெப்படி-௩ எலும்பிச்சம்பழச்சாறு செவ்விளநீர ச்சாறு தாளிச்சாறு வகைக்குபடி-வ கூடவிட்டுக்காய்ச்சி வடித்து முழுகிவர உஷ்ணம் சிலேத்மம் கண்புகைச்சல் குணமாகும் தேகங் குளிரும்.

## அறுகவேர்த் தயிலம்.

அறுகவேர் பலம்- இடித்து தூணிநீரிற்போட்டு எட்டொன்று ய் வற்றவைத்து வடித்து கியாழத்தில் நல்லெண்ணெ படி-௧ கூடவிட் டுக் கோரக்கிழங்கு பூமிச்சக்கரைக் கிழங்கு அமுக்குறாக் கிழங்கு வகைக்குப்பலம்-௧ ஆவின்பாலாலரைத்து போட்டுகாய்ச்சி வடித்து முழுகிவர மூலச்சூடு கபாலச்சூடு மேகதாங்கை பித்தம் வாதம் அரி

மேர்த்தி சூலை வயிற்றெரிவு நெஞ்சுநோய் தேகவரட்சி ஜலக்கடுப்பு குன்மமாகும் தேகங்குளிரும்.

முன்போல் அறுகம்வேர்க்கியாழஞ்செய்து அதில்நல்லெண்ணெய்படி ரு-வெட்டிவேர் சார்நாரத்தை கோஷ்டம் வகைக்குப்பலம்-க அரைத்துப்போட்டுக் காய்ச்சிவடித்து முழுகிவர ஜெ வியாதிகுணம்.

## பொன்னாங்காணித் தயிலம்.

பொன்னாங்காணிச்சாறு நல்லெண்ணெய் வகைக்குப்படி-க ஒன்றாய்க்கலந்து அதில் அதிமதுரம் கருஞ்சீரகம் செங்கழுநீர்க்கிழங்கு கோஷ்டம் வகைக்குபலம்-க ஆவின்பாலாலரைத்துப் போட்டுக்காய்ச்சி வடித்து முழுகிவர உட்சூடு உஷ்ணம் கைகால் உடம்பெரிவு கண்ணெரிவு பாலருடு தேகத்தகனம் நீங்கும் பொன்னாங்காணிசாறு நல்லெண்ணெய் ஆவின்பால் வகைக்குப்படி-உ பொற்றலைக் கரிப்பான் சாறு நெல்லிக்காய்ச்சாறு வகைக்குப்படி-க ஒன்றாய்க்கலந்து அதிமதுரம் பலம்-க அரைத்துப்போட்டுக் காய்ச்சிவடித்து முழுகிவர மேற்காட்டிய ரோகங்கள் குணமாகும்.

## வில்வாதித்தயிலம்.

வில்வவேர் விலாமிச்சுவேர் கோரைக்கிழங்கு வாழைக்கிழங்கு சீந்தி வகைக்குபலம்-கூ இவைகளை யிடித்துப் பதினாறுபடி தண்ணீரிற்போட்டு உ-படியாய் வற்றவைத்துக் கியாழஞ் செய்துகொண்டு கொம்பரக்குச்சேர்-உ தூணிநீரிற்போட்டு எட்டொன்றாய்க் கியாழஞ் செய்துகொண்டு நல்லெண்ணெய்படி-உ ஆவின்பால்படி-ரு திரிபலாதி கஸ்தூரி அதிமதுரம் கோஷ்டம் கருஞ்சீரகம் நற்சீரகம் மரமஞ்சள் சந்தனம் லவங்கப்பட்டையுஞ் சாந்துப்பட்டை செவ்வள்ளிலவங்கப்பட்டை பச்சைப்பூலாக்கிழங்கு ஏலம்வகைக்குபலம்-க ஆவின்பாலாலரைத்து கியாழத்திற்கரைத்து மெழுகுபதமாய் வடித்து முழுகிவர மேகநீர்-உ௰ பித்தம்-ச௰ குன்மமெட்டு சிரசுநோய் குணமாகும்.

வில்வவேர்பலம்-ய இடித்து படிக்குநீரிற்போட்டு எட்டொன்றாய்வற்றவைத்து வடித்தகியாழத்தில் நல்லெண்ணெய்படி-க கூடவிட்டு அதில்சர்க்கரை பலம்-க கடுக்காய் கஸ்தூரிமஞ்சள் ஏலம் வகைக்குப் பலம்-வீதம் அரைத்துப்போட்டுக் காய்ச்சிவடித்து முழுகிவரப் பித்தம் தேககாந்தல் மேகம் கண்புகைச்சல் இருமல் இரத்தமூலம் உட்சூடு வரட்சி குணமாகும்.

## குமரித் தயிலம்.

குமரிச்சாறுபடி-உ ஆவின்பால்படி-உ எள்ளெண்ணெய்படி-உ நீர்கடுகு கோஷ்டம் மாஞ்சில திரிபலைசீரகம் மதுரப்பூஞ்சாந்துப்பட்டை ஏலம் பச்சைப்பூலா மூலம் லவங்கப்பத்திரி லவங்கபட்டை செவ்வள்ளி அக்கிராகாரம் கஸ்தூரிமஞ்சள் லவங்கம் சந்தனம் ரோகணி செண்பகப்பூ ஆனைத்திப்பிலி மஞ்சிஷ்டி சோம்பு மஞ்சள்வகைக்குப்

பலம்-ற ஆவின்பாலாலாட்டிக் கலைத்துப் பதமாய் காச்சிவடித்து சீசாவிலடைத்து தானியத்துக்குள்வைத்து மூடிக் கால்பண்டலஞ் சென்றெடுத்து முழுகிவர சகலம்மக அஸ்திசுரம் பித்தவரட்சி குன்மம் பாண்டு உடலவெருப்புநீரும்.

கற்றாழஞ்சாறு செவ்விளநீர் வகைக்குபடி-ச பொற்றலையான் நெல்லிக்காய் கரிசாலை எலுமிச்சம்பழம் இவைகளின்சாறு ஆவின் பால் நல்லெண்ணை வகைக்குபடி-உ ஒன்றாய்க்கலந்து லவங்கம்சாதிக்காய்கோஷ்டம் தாமரைக்கிழங்கு சிறுநாகப்பூ வசுவாசி வெட்டிவேர் அகில் லவங்கப்பத்திரி பச்சைசர்ப்பூரம் அதிமதுரம் மஞ்சள் சிறுதேக்கு திப்பிலி வகைக்குகழஞ்சு-சு அரைத்துப்போட்டு காய்ச்சி ஸ்நானஞ்செய்ய சுரம் க்ஷயம் விக்கல் பித்தம் ரணம் நேத்திரநோய் மூலம் வியர்வை தாகம் அரோசியம் கபாலச்சூடு தேககாந்தல்எரிவு குணமாகும்.

## சகாதேவித்தயிலம்.

சீதேவியார் செங்கழுநீர் வல்லாரை சிறுகீரைபேய்மிரட்டி பொன்னாங்காணி சவுரிக்கொடி ஓரிலைத்தாமரை வகைக்கு-வ தூக்கு இடித்துப் பதக்குநீர்விட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்தகியாழத்தில் நல்லெண்ணைபடி-உ கூடவிட்டு கோஷ்டம் லவங்கப்பட்டை லவங்கப்பத்திரி அரத்தை தேவதாரம் அதிமதுரம் கச்சோலம் சண்பகப்பூ மஞ்சிட்டி அகில் மரமஞ்சள் வகைக்குபலம்-ற அரைத்துப்போட்டு காய்ச்சிவடித்து தலைமுழுகி உடம்பில்தடவ தேகவலி சிரோபாரம் பாண்டு காமாலை அஸ்திசுரம் வாதம் கபம் கைகாலெரிவு கண்ரோகந்தீரும்.

சீரா செங்கழுநீர்சாறு ஆவின்நெய் வகைக்குபடி-க ஒன்றாய்க் கலந்து அதில் ஏலம் அதிமதுரம் சந்தனம் சிறுநாகப்பூ விலாமிச்சு வேர் சீரா செங்கழுநீர்வேர் கோஷ்டம் கடுகுரோகணி லவங்கம் வகைக்கு விராகனிடை-உ சாற்றால் அரைத்துப்போட்டு காய்ச்சி முழுகிவர சுரங்கள் தேகஎரிவு காந்தல் தலையெரிவு நீங்கும் நேத்திரத்தில இரத்தப் ஊறல்.

## கொம்பரக்குத்தயிலம்.

கொம்பரக்குபலம்-அ தூணிநீரிற்போட்டு எட்டொன்றாய்க் கியாழஞ்செய்து வடித்துகொண்டு அதில் எள்ளெண்ணைபடி-ருதாடி படி-உ தயிர்த்தண்ணீர்படி-க பால்படி-ரு சதகுப்பை கடுகுரோகணி கிளிஞ்சில்பட்டை பூஞ்சாந்துபட்டை பச்சைபூலாக்கிழங்குசெவ்வள்ளிக்கிழங்கு லவங்கபத்திரி லவங்கபட்டை மாஞ்சில் கோஷ்டம் கஸ்தூரிமஞ்சள் அதிமதுரம் கெந்தகம் கருஞ்சீரகம் ஏலம் வகைக்கு கழஞ்சு-உ ஆவின்பாலாட்டிச் சேர்த்து மெழுகுப்பதத்தில் வடித்து

## சங்கவேர்த்தயிலம்.

கால்றுலாம் சங்கவேரையிடித்துத் தூணிநீரிற் போட்டு எட்டொன்றாய்க் கியாழஞ்செய்து நல்லெண்ணைபடி-உ மிளகு கருஞ்சீரகம் ஏலம் மாசக்காய வகைக்குபலம்-க ஆவின்பாலா லரைத்துச்சேர்த்து காய்ச்சிவடித்து முழுகிவர குட்டம் சொறி சிறங்குகிரந்திகுலே செங்கரப்பன் வண்டுகடி சிலவிஷம் க்ஷயம் இருமல்தீரும்

சங்கம்வேர்பட்டை பலம்-ய இடித்து எட்டுப்படி நீர்விட்டு ஒருபடியாய் வற்றவைத்து கியாழத்தில் ஆவின்பால் இளநீர் நல்லெண்ணெய் வகைக்குபடி-க கூட்டிவிட்டு மிளகு விராகனிடையும் பூலாக்கிழங்கு சீரகம் கஸ்தூரிமஞ்சள் வகைக்கு விராகனிடையும் அரைத்துப்போட்டுக் காய்ச்சி வடித்து முழுகிவர மேகாங்கிசொறி மற்ற மேகத்திலெழுந்த வியாதி வாயு முதலானரோகங்குணமாகும்.

சங்கம்வேர்ப்பட்டை பலம்-ய இடித்து எட்டுப்படி தண்ணீரிற் போட்டு ஒருபடியாய் வற்றவைத்ததில நல்லெண்ணை படி-க விட்டு அதில் அழிஞ்சிவிரைப்பருப்பு மிளகு செங்கழுநீர்க் கிழங்கு கோஷ்டம் வகைக்குப்பலம்-க ஆவின்பாலா லரைத்துப் போட்டுக் காய்ச்சிவடித்து முழுகிவர தலைப்புழுவெட்டுதலைமயிருதிர்தல் திணவு செம்மட்டைமயிர் மாறும்.

## அசுவகெந்தித்தயிலம்.

அமுக்கம்வேர் பலம்-ய தூதுவேளைவேர் குருந்தொட்டிவேர் வகைக்குபலம்-அ சீந்திக்கொடி பலம்-சு அமுக்குராகிழங்கு பலம்-ச கோரக்கர்மூலி சாரணைவேர் வகைக்குப்பலம்-உ சருள்ளிபலம்-உ இவைகளையிடித்துத் தூணிநீர்ப்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்தகியாழத்திற்குநிகர் ஆவின்நெய்விட்டு அதில் தோல்நீக்கி வறுத்திடித்த இஞ்சிதூள் பலம்-சு சாதிப்பத்திரி பலம்-உ சாதிக்காய் ஆபின் வகைக்குபலம்-க குருசாணிதூமம் வால்மிளகு பச்சைகூகைநீர் வகைக்குக்கழஞ்சு-உ இவைகளை அரைத்துப்போட்டுக்காய்ச்சிவடித்து முழுகிவரக் கரப்பன் சொறிசிரங்கு அரும்புண் விஷத்தூபாண்டு பித்தம் சூலைக்கட்டுநீங்கும் கண்தெளிவுண்டாகும்.

## துளசித்தயிலம்.

துளசிச்சாறு திருநீற்றுபச்சைச்சாறு நல்லெண்ணை ஆவின்நெய் வகைக்குபடி-க பசும்பால்படி-ச சிற்றாமணக்கெண்ணை படி-உ ஒன்றாய்க்கலந்து அதில்மஞ்சள் மரமஞ்சள் சுக்கு முத்தக்காசு வெட்டிவேர் விளாமிச்சம்வேர் சீரகம் அதிமதுரம் கற்கடகச்சிங்கி சன்னலவங்கப்பட்டை வலம்புரிக்காய் சாதிக்காய் தக்கோலம் சடாமாஞ்சில் ஏலம் பாக்கிப்பட்டை சண்பகப்பூ கசகசா அதிவிடயம் கரிசாலைகண்ணி பித்தரோசனி தேவதாரம் சந்தனக்கட்டை ஆபின் சிறுநாகப்பூ வகைக்கு விராகனிடை-ங இவைகளை ஆவின்பாலா லரைத்து

து போட்டுக் காய்ச்சிவடித்து முழுகிவர க்ஷயம் காசம் பீனிசம் குன்மம் கிராணி பாண்டு மண்டையிடி சூலை காதுமந்தம் கண்புகைச்சல் தேகவலி நீங்கும்.

### அயனவில்வாதித்தயிலம்.

அயனத்தின் வயிரச்சிராய் வில்வவேர் சிறுகீரைவேர் சிற்றாமுட்டிவேர் சிந்திற்கொடி அமுக்குறாக்கிழங்கு மிளகுதிரிபலை நன்னாரிவேர் வகைக்குப்பலம் ௮ இடித்து எட்டுமரக்காலசலத்திற் போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து வடித்தகியாழத்தில ஆவினெய் நல்லெண்ணெ இளநீர் வகைக்குபடி-௪ ஒன்றாய்க்கலந்து விலாமிச்சுவேர் விளாவரிசி சிற்றரத்தை மஞ்சிட்டி வெட்டிவேர் அதிமதுரம் பச்சை வெட்பாலையரிசி சந்தனம் திரிகடுகு மகப்பூ குக்கில் கச்சோலம் தேவதாரம் சிறுநாகம் செஞ்சந்தனம் சடாமாஞ்சில் நறுக்குமூலம்கோஷ்டம் தேட்கொடுக்கு திப்பிலிமூலம் வகைக்குகழஞ்சு-௮ ஆவின்பாலாலரைத்துக்கலக்கி காய்ச்சிவடித்து முழுகிவர ஈளை இருமல் கண்ணெய் பித்தசன்னி சலதோஷம் மந்தம் காச்சல்பீனிசம்செவியடைப்பு வாயு உதரவாயுவாய் ரோகம் மண்டைச்சூலைதீரும்.

### சுரநாரத்தயிலம்.

அரத்தை அமுக்கிறாக்கிழங்கு சதகுப்பை கோஷ்டம் மரமஞ்சள் கொம்பரக்கு திரிகடுகு அதிமதுரம் திரிசாதம் கடுகுரோகணி முத்தக்காசு வகைக்குகழஞ்சு-௨ இடித்து ஒருபடி நல்லெண்ணெயிற் போட்டு காய்ச்சி வடித்து முழுகிவர சுரம் காந்தல் வெப்பு பழஞ்சுரம் சுரத்திலுண்டாகும் பலபிணிகளு நீங்கும்.

### சரிப்பான் தயிலம்

சரிப்பான்சாறு நல்லெண்ணெ வகைக்குபடி-௧ கற்றாழஞ்சாறு நெல்லிக்காய்ச்சாறு வகைக்குபடி-வ கஸ்தூரிமஞ்சள் சாதிக்காய் வகைக்குபலம்-௧ ஆவின்பாலாலரைத்துச் சேர்த்துக் காய்ச்சி வடித்து முழுகிவர கண்ணெப்தலைநோய் செவிநோய்பித்தம் ஊஷ்ணம் பீனிசம்தீரும்.

### சம்பீரத் தயிலம்.

எலுமிச்சம்பழச்சாறு படி-௧௨ நல்லெண்ணெ படி-௧ கர்ப்பூரச்சிலாசத்து கல்நார் அதிமதுரம் அக்கிராகாரம் லவங்கபத்திரி சாதிர்வேதி கோஷ்டம் வாய்விளங்கம் சாதிக்காய்லவங்கப்பட்டைகருஞ்சீரகம் நற்சீரகம் கோரோசனை பூலாக்கிழங்கு மரமஞ்சள் வகைக்கு பலம்-வ அரைத்துப்போட்டு காய்ச்சிவடித்து ஸ்நானஞ் செய்து உள்ளுக்கு சாப்பிட்டுவர எலும்பித்தல் நச்சுலலி நீங்கும்.

கஞ்சா அவுரிபுளியமகிழ் இவைகளினிலைச்சாறு எலுமிச்சநாரத்தைக்கு இவைகளின்பழச்சாறு முத்தக்காசுக் கியாழம் வகைக்கு

படி-க நல்லெண்ணை படி-உ ஒன்றுய்கலந்ததில் அதிமதுரம்காட்டாத்திப்பூ கோஷ்டம் திரிபலை அழிஞ்சிவிரை தக்கோலம் சாதிக்காய் அகில் மிளகு சந்தனம்வெட்டிவேர்விலாமிச்சுவேர் பெருமரபட்டை வகைக்குப்பலம்-கற இவைகளை இரண்டுபடி ஆவின்பாலிலரைத்துக் கலக்கி கூடவிட்டு காய்ச்சிவடித்து முழுகிவர நேத்திரவியாதி பிணிசம் பொடுகு புழுவெட்டுப்புண் மற்ற சிரசுவியாதி மேகரோகம் தீரும்.

வங்குமரீசத்தயிலம்.

கஞ்சாவிலைச்சாறு நல்லெண்ணை வகைக்குப்படி-க ஒன்றுய்க்கலந்து அதில் மிளகுபலம்-உ அரைத்துப்போட்டு காய்ச்சி வடித்து முழுகிவர சகல பீனிசந்தீரும்.

எட்டிக்கொழுந்தும் மிளகுந்தட்டி நல்லெண்ணையிற் போட்டுக் காய்ச்சிவடித்து முழுகிவர தலைவலிநீங்கும்.

மிதிபாகல் தயிலம்,

மிதிபாகல் கருக்குவாச்சி துளசிநொச்சிஇவைகளினிலைச்சாறு எருக்கம்பழுப்புச்சாறு ஆதளம்பழுப்புச்சாறு வகைக்குப்படி-வநல்லெண்ணை படி-க ஒன்றுய்கலந்து அதில்திரிசாதம் கருஞ்சீரகம் நற்சீரகம் மிளகு அரின் சுக்கு அதிமதுரம் அதிவிடையம் சன்னிநாயகம் வகைக்கு கழஞ்சு-க தேவதாரம் கழஞ்சு-அ இவைகளை யரைத்துப் போட்டு காய்க்சிவடித்து முழுகிவா தலையிடி பீனிசம் வாயு கபால வாயுதீரும்.

சரத்தொட்டித்தயிலம்.

சரத்தொட்டி முசுமுசுக்கை கரிப்பான் அவுரி வெற்றிலை நொச்சி கருநொச்சி காஞ்சிரை கருவூமத்து கஞ்சா இவைகளின் கொழுந்துசாறு எருக்கம்பழுப்புச்சாறு இஞ்சிச்சாறு வகைக்குப் படி-கவ இவைகளை ஒன்றுய்கலந்து ம-நாள் ரவியில்வைத்திருந்து பதினோராநாளில் திரிகடுகு கோஷ்டம் அக்கிராகாரம் கருஞ்சீரகம் ஓமம்குருசாணிஓமம் சாம்பிராணி பூலாக்கிழங்கு வகைக்கு விராகனிடை-உ வெள்ளாட்டுப்பாலா லரைத்துப்போட்டு காய்ச்சிவடித்து முழுகிவர மேகம் உக-ம் சகலபீனிசம் கபாலக்குத்து க்ஷயம் மேககாங்கையும் நீங்கும்.

சவ்ரித்தயிலம்.

ஆனைதந்தப்பொடி பலம்-௫ எட்டுப்படி தண்ணீரிற் போட்டு வற்றவைத்து கியாழம்படி-௧ நல்லெண்ணைபடி-௧ சிவந்த ஆலமுகிள் சவுரிக்கொடி அவுரி கையாந்தகரை இவைகளின்சாறு வகைக்குப் படி-௪ ஒன்றாய்க் காய்ச்சிவடித்து சிரசிற் பதமிட்டுவரமயிர்கறுத்து வளரும்.

சவுரிபலம்-௰ இடித்துத் தூணிநீரிற்போட்டு எட்டொன்றாய் வற்றவைத்து நல்லெண்ணைபடி-௧ கருஞ்சீரகம் பலம்-௧ அதிவிடயம் மரமஞ்சள் வகைக்குப்பலம்-௨ ஆவின்பாலா லரைத்து சேர்த்துக் காய்ச்சி முழுகிவர குட்டம்வாதகரப்பன் கழலை காய்ப்பு கணடவீக்கம்தீரும்.

வேங்கைப்பட்டைத்தயிலம்.

வேங்கைப்பட்டைபலம்-௰ இடித்து முன்போற் கியாழஞ்செய்து நல்லெண்ணைபடி-௧ கூடவிட்டு விலாமிச்சுவேர் மிளகு வெள்ளுள்ளி நற்சீரகம் வகைக்குபலம்-௧ அரைத்துப்போட்டுக் காய்ச்சிவடித்து முழுகிவர வாதம் சூலை பித்தம் பீனிசம் மண்டையிடி தேகவீக்கம் நீங்கும்.

வேப்பம்பட்டைத்தயிலம்

நூறுவருடஞ்சென்ற வேப்பம்பட்டை துலாம்-௪ இடித்துமுன் போற் கியாழஞ்செய்து நல்லெண்ணைபடி-௨ கூடவிட்டு ஏலம் பலம் ௨ இலக்கைவேர் பழம்பாசி அக்கிராகாரம் வகைக்குபலம்-௧ அரைத்துப்போட்டு காய்ச்சிவடித்து முழுகிவர வாதம் குட்டம் தேகக்கடுப்பு செங்கரப்பன் புண்புரைகள் நீங்கும்.

குருந்தொட்டித்தயிலம்.

குருந்தொட்டிவேர் துலாம்-௪ இடித்துத் தூணிநீரிற் போட்டு முன்போற் கியாழஞ்செய்து அதில் சுக்குமிளகு ஏலம் வகைக்குப் பலம்-௧ அரைத்துப்போட்டுக் காய்ச்சிவடித்து முழுகிவர வாதம் ௮௰ம் தீரும்.

பூப்புடக்கார்மேகத்தயிலம்.

சிவன்வேம்பு நிலவாகை நரிமிரட்டி இவ்வசமூலம் வகைக்குத் துலாம் கால்வீதமாக வெள்ளாட்டு நீரில்நனைத்து வெயிலில் உலர்த்தவும் இந்தப்படி மூன்றுமுறை செய்தபின் அவைகளை ஒருபானையில்

அடித்து அந்தப்பானைவாய் பொருத்த ஒருஓடுவைத்தமூடி சந்துவாயில் ஏழுசீலை மண்செய்து காயவைத்து அந்தப்பானைந் தூரின்மத்தியில் பத்து சிறுதுவாரஞ்செய்து அந்ததுவாரங்கள் தெரியாபல் ஒரு பழகின சிறுகலையம்வைத்து உளுந்துஅரைத்து ஏழுசீலைசெய்துகாயவைத்துக்கொள்ளவும் அப்பால் முழங்கால் ஆழக்குழிவெட்டி அது நிறைய ஆவின் சாணத்தைப்போட்டு அதின்மேல் மேற்படி பானையின் அடிக்கலசம் முங்கவைத்து அந்தப்பானையின் அடித்தூரைச்சுற்றிலும் நாலு அங்குலஉயரம் மணலைபரப்பி அதற்குமேல்பானைமறையக் காட்டெரு அடுக்கிப் புடம்போடத் தயிலமிறங்கும் அந்தத்தயிலத்தை எடுத்துவைத்துக் கொள்ளவும்.

இதற்குமேல் மருந்தாவது பரங்கிப்பட்டை தூள்பெருங்காயம் அமுக்குறுக்கிழங்கு கஸ்தூரிமஞ்சள் கும்மட்டிகா பெண்ணை ஏலம் வால்மிளகு திப்பிலி கடுக்காய் நெல்லிவற்றல் தான்றிக்காய்கார்போகலரிசி வகைக்கு கழஞ்சு-வ இந்துப்பு நவாச்சாரம் வெடியுப்பு வகைக்கு கழஞ்சு-உ கிராம்பு கழஞ்சு-க சாதிக்காய் சாதிப்பத்திரி வகைக்குகழஞ்சு-உ சிறுகுழந்தைகளின் அமிரிபாலரைத்து நிகரில்லாத முத்தினதேங்காய்க்குள் செலுத்தி அதின்வாயை காஞ்சிரை முனைபால் இறுக்கி அப்பால் லவணம் சுண்ணும்பு புகையூறல் இம்மூன்றையுமரைத்து தூணியிற்றடவி அந்ததேங்காய்க்கு மூன்றுசீலைசெய்துக் காயவைத்து அதை குக்குடபுடம்போட்டு மேல்கவசஞ் சிரட்டைதள்ளி சமூலத்தையும் கல்வத்திலிட்டு மெழுகுபோலாட்டி செப்பில் அடைத்துக்கொண்டு நெல்லிக்காய் அளவாகத்தயிலம் மூன்றுபணவிடைகூட்டி எழுநாள் இருவேளையுஞ் சாப்பிட்டு அப்பால்ஆவினெய் ஆமணக்குநெய்இலுப்பைநெய் இம்மூன்றையுங்கலந்துசுடவைத்து சிரசு உடம்பில்தேய்த்து வெந்நீரில் ஸ்நானஞ் செய்துவர தேகத்தில் பொங்கிவருகின்ற மேகப்புண் சொரி அரிகரப்பான் அரிகிரந்தி சூலை புண் சொரி குஷ்டம் சூலை கஅ-வாதம் அம-சூதகத்திரட்சி நீராமை வீக்கம் கவுசி மகோதரம் கிருமி புழுவெட்டு விழியில் நீர்வடிதல்தீரும். வினைகளெல்லாம் ஒழிந்துபோகும்.

இரதம் கெந்தி இரசசெந்தூரம் வகைக்குப் பலம்-க மேற்படி தயிலத்தால் மெழுகுபோலாட்டி சிமிளில் வைத்துக்கொண்டு ஒரு கழஞ்சுவீதஞ் சாப்பிட்டுவர முடிகருக்கும்தேகம் கல்போலாகும்சிவந்துமின்னும் வாலைப்பருவமாகும் எமன் ஓடி ஒளிவான் அவமிருத்து

நீங்கும் பத்துநாளில் அரையாப்பு கிரந்திபுற்றும் மற்ற சகலநோய்க ளுந்தீரும் இந்தமருந்து சாப்பிடுங்காலே பததியமாவது அறுசுவை புளி உப்புகடுகு காயம் வாழைக்காய் பெரும்பயறு உளுந்து கள்ளி பசும்பயறு அவரைப்பிஞ்சு பொன்னாங்காணி துவரை முருங்கைப் பிஞ்சு வழுதலை நெய்பால் சீனிமிளகு சேர்த்துக்கொள்ளவும்.

பின்னும் மேற்படி மெழுகுக்கு கிறுகிறுப்பு சகல மேகங்கள் அனுபோகத்தால் வந்தடைந்த சூடு மூலக்கொதிப்பு குஷ்டநோய் காமாலை வாயுபணப்போலே தடித்துவரும் தடிப்புவெள்ளை தீரும்.

பரங்கிப்பட்டை ஆடாதோடைவேர் பிரம்பின்மூலம் அதிவிட யம் கிராம்பு சிறுநாகப்பூ சித்திரமூலம் அதிமதூரம் லவங்கப்பத்திரி கருஞ்சீரகம் சமனிறைபாய்த்தூக்கி இடித்து வடிகட்டி திரிகடித்தூ ளில் மேற்படி தயிலம்விட்டு மத்தித்து ம-நாட் கொள்ள கைகால் முடக்கு திமிர்வாயு அருவருப்பு மூலச்சூடு அண்டவாதம் நடுக்குவா தம் சன்னி இதற்கு முந்திசொல்லிய வியாதிகளுந்தீரும்.

மேற்படி தயிலத்தை படர்தாமரை மேகச்சிரங்கு மேகரணங் கள் மேகப்புற்று தமுவணை அரிகரப்பன் யோனிச்சூலை யோனிப்பு ணதீரும்.

தயிலப்படலம்-முற்றிற்று.

---

## ஊழிகாற்றுப் படலம்.

அதாவது துர்க்கந்தங்களால் புலால் கவிச்சி நாசி வழிகளால் பிரவேசித்து சரீரோபாரத்தின் மயிர்க்கூச்சலினால் இரத்தங் கெட்டு விஷக்காற்றுப் படலமென வகுக்கப்பட்டது இது தொற்று பிணி யெனப்படும்.

விஷக்காற்றினால் இரத்தமுறிந்து நீராகிக் கொம்பனென்றும் குடற்படுவனென்றும் அக்கரமென்றுஞ் சொல்லப்பட்ட மூன்றுவித பேதி உண்டாகின்றன.

அவற்றுள் கொம்பனென்று பேதிகண்டால் வாந்தி பிராந்திய களைப்பு குளிர்ச்சி வியர்வை தேகத்திற்கடுப்பு உளைவு நாவரட்சிவிக்

